"நான் செக்ரெட்டரி
ஆகையால் ஸ்மார்ட்டாக இருக்கத்தக்க உடை அணிய வேண்டுமல்லவா."



உங்கள் அந்தஸ்தே தனி
அதற்கேற்ற துணி

மஃபத்லால்
ஃபேப்ரிக்ஸ்



மஃபத்லால் இண்டஸ்ட்ரீஸ் மஃபத்லால் ஃபைன்

MF-4-TAM

# Kalki Shopping Page

## HMV STEREO 1010



Rs 1530/-
Max. Rec. Ret. Price incl. Excise Duty. Taxes extra.




**HMV STEREO SYSTEMS**

## HMV STEREO POPULAR II



Rs.1125/-
Max. Rec. Ret. Price incl. Excise Duty. Taxes extra.




**HMV STEREO SYSTEMS**

*Available at*

**AR. AS. P. V. P. V. & CO.,**
North Veli Street, Madurai-1 Ph: 24322

**MODERN RADIO HOUSE**
83-85, South Avani Moola Street, Madurai-1
Ph: 25686

**RHYTHM HOUSE**
69-A, West Tower Street, Madurai Ph: 25522

**ROYAL MUSIC CENTRE**
136, West Masi Street, Madurai-1 Ph: 31291

**SHREE VIJAY AGENCIES**
110, Dindigul Road, Madurai Ph: 24468

---

## Bharat TV NOW COMES TO YOU WITH SOLID STATE TECHNOLOGY





### 20" Urvashi Solid State
(Shutter Type)

- Laminated sliding shutters
- 3 ICs single printed circuit board
- Automatic picture control
- Multichannel tuner
- 20 cm dual cone double speaker

### 20" Solid State BT 202
(without shutters)

- 20 cm 'Hi-fi' dual cone speaker
- Acoustically designed cabinet
- 3 ICs
- Multichannel tuner
- Automatic picture control

**ARUNA & CO**
340, Tiruvottiyur High Road,
Madras-600 019
Ph: 553644 – 552728

**GANGA RADIOS**
47, Gangadhareeswarar Koil Street,
Purasawalkam, Madras-600 084
Ph: 661414

**RAJA RADIO & ELECTRICALS**
228, Royapettah High Road,
Madras-600 014
Ph: 841533

தமிழ்த் திரை உலகிலிருந்து ஹிந்தித் திரைப்பட உலகிற்குத் தாவி நட்சத்திர அந்தஸ்தை முழுமையாக எட்ட நினைப்பவர்கள் பலர்.

ஆனால் ஹிந்தி நாடக மேடையிலிருந்து தமிழ் நாடக மேடைக்குத் தாவி, அந்த நாடக மேடை அனுபவத்தைத் திரைப்படத் துறைக்கு நன்கு பயன்படுத்திக் கொண்டவர் வி. எஸ். ராகவன். அவரிடம் கால்நூற்றாண்டு தமிழ் நாடக மேடை அனுபவம் ஸ்டாக்கில் இருக்கிறது.

வி.எஸ்.ராகவன் ஹிந்தி பிரசார சபாவின் ஆதரவில் ஹிந்தி பயின்றார். அந்த வேகத்தில் போரஸ் அலெக்ஸாண்டர் சம்பந்தப்பட்ட சரித்திர நாடகத்தை மாணவர்கள் ஹிந்தியில் நடித்துப் பார்த்தார்கள். படிப்பு ஆர்வம் நடிப்பு ஆர்வமாக மாறியது. அடுத்த ஹிந்தி நாடகத்தை ஆரம்பித்தார்கள்.

அப்போது தோன்றியதுதான் ஐ.என்.ஏ. எனப்படும் இந்தியன் நேஷனல் ஆர்ட்டிஸ்ட்ஸ் தியேட்டர். அடுத்தாற்போல அவர்கள் ஹிந்தி நாடகத்தைப் போடவில்லை. தமிழ் நாடகத்தையே போட்டார்கள். அப்போது ஊற்றெடுத்துப் பெருகிய நாடகக் கலை ஆர்வம் இருபத்தி ஐந்து வருடங்களாக வற்றாமல் நீடிக்கிறது. திரை இறங்கவில்லை!

1954 ல் ஐ.என்.ஏ. தியேட்டர் தோன்ற வி. எஸ். ராகவனுக்குத் துணையாக நின்றவர்கள், நடிகர் மாலி, வாதிராஜ், கே. பாலசந்தர், நடராஜ் போன்றவர்கள்.

'ஒரே காட்சி அமைப்பு' நாடக முறையைத் தமிழ்நாட்டில் அமுலுக்குக் கொண்டு வந்தவர் ராகவனும் அவர் குழுவினரும் தான். 'சதுரங்கம்' என்ற ஒரே காட்சி அமைப்பு நாடகத்தை 1961ல் அரங்கேற்றினார்.

எம்லின் வில்லியம்ஸ் என்பவர்எழுதியிருந்த ஒரு ஆங்கில நாடகம் நண்பர் ராகவனுக்கு மிகவும் பிடித்து விட்டிருந்தது. அதை மொழி பெயர்த்து நடிக்க அந்த ஆங்கில ஆசிரியரிடமே அனுமதி வாங்கினார். திரு கே. பாலசந்தர் அழகாகத் தமிழில் வசனங்களை அமைத்துக் கொடுத்தார். அரங்கேற்றத் தேதி நிச்சயம் செய்து ஐந்தாறு நாட்களுக்கு முன்பே கிருஷ்ண கான சபா அரங்கில் 'செட்' போடப்பட்டு ஒத்திகைகள் நடந்தன. நாடகம் மறுநாள் நடக்க வேண்டும் என்ற நிலையில் கதாநாயகி வேடத்தில் ஒத்திகை பார்த்துக் கொண்டிருந்த பெண்மணியின் உடல் நலம் வெகுவாகப் பாதிக்கப்பட்டு விட்டது!

நாடகத் துவக்க தேதியை ஒரு வாரம் தள்ளிப் போடலாம் என்றால் இடையே சபா அரங்கத்தில் வேறு ஒரு நிகழ்ச்சி நடக்கவிருந்தது. நள்ளிரவில் பத்திரிகைக் காரியாலயத்திற்குப் போய், இரண்டு மூன்று நாட்கள் தள்ளி நாடகத் தேதியை அறிவித்து விட்டு, விஜயலட்சுமி என்ற புது நடிகைக்கு அந்தக் குறுகிய காலத்தில் பயிற்சி அளித்து வெற்றிகரமாக நாடகத்தை நடத்தினார். இப்படி எத்தனையோ அனுபவங்கள்.

''நாடகம் பார்க்கிறவர்களுக்கு அது ஒரு பொழுது போக்கு. நடிக்கிறவர்களுக்கு அது ஒரு தொழில். இந்த இரண்டு அம்சங்கள் ஒன்றை ஒன்று மதித்து மரியாதை செலுத்த வேண்டுமானால் நாடகக் குழுவில் நல்ல கட்டுப்பாடு தேவை. என்னுடைய லட்சியமே அந்தப் பூரண கட்டுப்பாட்டை உருவாக்கிக் கொள்ள வேண்டும் என்பது தான்'' என்று கூறும் ராகவனுக்கு ''இந்த இருபத்தி ஐந்து ஆண்டு காலத்தில் பல நாடகங்களை கே. பாலசந்தர், ரசவாதி, தோட்டக்கார விசுவநாதன், சுந்தர பாகவதர், ஜோசப் ஆனந்தன், வாலி போன்றவர்களின் உதவியுடன் தயாரித்து நடித்திருக்கிறோம். எல்லா நாடகங்களுமே' பிரமாதம்' என்று சொல்ல மாட்டேன். ஓரிரு நாடகங்கள் 'சுமார்' தான்'' என்று ஒப்புக் கொள்ளும் நேர்மை இருக்கிறது.

எத்தனை தடவைகள் தமது நாடகங்கள் மேடை ஏறியிருக்கின்றன என்ற கணக்கை இவர் வைத்துக் கொள்ளவில்லை. எவ்வளவு தரமான நாடகங்களை நடிக்க முடியும் என்று பார்ப்பதுதான் இவரது லட்சியம்!

**— கோமதி ஸ்வாமிநாதன்**





# விஜயஸ்ரீயிலிருந்து லட்சுமிஸ்ரீ வரை!

'ஷோபா கொலையா? தற்கொலையா'? இப்படி ஒரு போஸ்டர்! ஏதாவது தினசரிப் பத்திரிகையின் போஸ்டர் என்று பலபேர் நினைக்கலாம். அல்ல. மலையாளப் படமான 'இஷ்ட ப்ராணேஸ்வரி' படத்தின் விளம்பரச் சுவரொட்டி தான்! ஷோபா அந்தப் படத்தில் நடித்தார் என்ற ஒரே குற்றத்துக்காக அப்படத்தின் தயாரிப்பாளர்களோ அல்லது விநியோகஸ்தர்களோ இந்த அளவுக்குத் தாழ்ந்துவிடலாமா? இதைப் பற்றி இயக்குனர் பாலு மகேந்திராவைக் கேட்டால், ''அவன் என்னுடனேயே இருக்கிறாள். இனி யார் என்ன செய்தால் என்ன?'' என்பது போன்ற ஒரு பார்வைதான் பதிலாகக் கிடைக்கிறது.

விஜயஸ்ரீயிலிருந்து லட்சுமிஸ்ரீவரை பல தற்கொலைகள் நடந்து விட்டன. ஒட்டு மொத்தமாகப் பார்த்தால் ஒன்று தெளிவாகத் தெரிகிறது. இந்தத் தற்கொலைகளுக்கு எல்லாம் அடிப்படைக் காரணம் ஒரு மூன்று எழுத்து வார்த்தை: காதல்! அநேகமாகப் பொருந்தாக் காதல். ஏற்கனவே மணமானவருடன் காதல்! அதுதான் ஏனென்று புரியவில்லை. மணமானவருடன் இணைந்து மனம் மகிழ்வோரின் பட்டியல் நீண்டுகொண்டே போகிறது. சாவித்திரி, புஷ்பலதா, மஞ்சுளா, ஷீலா, கே. ஆர். விஜயா, வைஜயந்திமாலா, ஷோபா, ஹேமமாலினி இத்தியாதி.

கடைசியாக லட்சுமிஸ்ரீ. காதல் யாரிடம் எப்போது உரு வாகும் என்று கூற முடியாது தான். ஆனால் தெரிந்தே பலரால் எப்படித் தவறு செய்ய முடிகிறது என்பதுதான் புரியவில்லை. பல திரை உலகப் பெண்மணிகள் ஏற்கனவே மணமானவருடன் சேர்ந்து வாழ்கிறார்கள். ''இப்படித் திருமணமாகாமல் சேர்ந்து வாழ்வது தவறு'' என்றும், ''வாழ்ந்தால் என்ன பிசகு'' என்றும் வாதப் பிரதிவாதங்கள் திரையுலகில் நடக்கின்றன.

வாழ்க்கையில் ஒரு பிடிப்பு ஏற்படவும் பாதுகாப்புக்காக வும் இப்படி ஒருவரைக் கொழுகொம்பாக்கிச் சுற்றிக் கொள்ள நினைப்பவர்கள் தாங்கள் வரையும் காதல் கோலம் அலங் கோலமாகாமல் பார்த்துக் கொள்ளவேண்டும் அல்லவா?

ஒரு நடிகை தான் காதலித்தவரைக் கல்யாணம் செய்து கொண்டு வாழப் போவதாகக் கூறவும் அதை வெறுத்த

- விஜய ஸ்ரீ
- கல்பனா
- ஷோபா
- சுனந்தினி
- லட்சுமி ஸ்ரீ

அந்நடிகையின் தாயார் கையில் விஷத்தை வைத்துக் கொண்டு ''நீ அவனுடன் போனால் நான் இதைக் குடித்து விடுவேன்'' என்று மிரட்ட, தாயார் வார்த்தையை முடிக்கு முன்பே அவரது கையில் உள்ள விஷத்தைத் தான் வாங்கிக் கொண்டு ''உனக்கு முன் நான் இதைக் குடித்துவிட்டு ஒரேயடி

யாகப் போய் விடுகிறேன்'' என்றாராம் அந்த நடிகை.

''தற்கொலை செய்து கொள்பவர்கள் கோழைகள். வாழ்க்கையில் எதிர் நீச்சல் போடத் தெரியாதவர்கள்'' — இது அனைவரும் அறிந்த கருத்துத்தான். நடிகை எதிர் நீச்சல் போட்டுத்தான் சினிமா உலகில் முன்னுக்கு வரவேண்டும் என்பதும் எல்லோரும் அறிந்த உண்மையே. புகழ் என்ற வைரப் பதக்கத்தைப் பணம் என்ற தங்கச் சரட்டில் கோத்து வாய்ப்பு என்ற வெள்ளித் தட்டில் வைத்து யாரும் நடிகைகளுக்கு நீட்டுவதில்லை.

விஜயஸ்ரீ ஒருவிதமாகத் தற்கொலை செய்து கொண்டார் என்றால் கன்னடத்து நடிகை கல்பனாவும் அதே விதமாக மாண்டார். சுகந்தினி மாடியிலிருந்து விழுந்து மரணமடைந்தார். நடிப்பில் ஷோபாவின் அடிச்சுவட்டைப் பின்பற்றினாரோ இல்லையோ பிணமாவதில் அதே முறையைப் பின்பற்றினார் லட்சுமிஸ்ரீ.

ஜோதி லட்சுமி பத்து வருட காலம் ஒருவருடன் வாழ்ந்துவிட்டுப் படீரென்று உறவை முறித்துக் கொண்டார். அவர் சொல்லும் காரணம் வேறு பல நடிகைகளுக்குப் பாடமாக இருந்தால் நல்லதுதான்; ''நான் திருமணம் செய்து கொள்ளப் போகிறேன். ஆனால் முன்பே திருமணமானவரை அல்ல. கல்யாணமானவருடன் நான் வாழ்ந்து அனுபவித்த துன்பம் போதும். திரை உலகில் சம்பந்தப்பட்ட ஏற்கனவே கல்யாணமாகாத ஒருவரைத் திருமணம் செய்து கொண்டு வாழ்வேன்.''

தற்கொலைகள் தமிழ் நாட்டில் குறிப்பாக, கலைஞர்களிடையே அதிகமாகி வருகிறது. இதை யார் தடுத்து நிறுத்த முடியும்? சம்பந்தப்பட்டவர்களுக்கே மன பலம் வேண்டும் என்கிறார்கள். இருந்தாலும் நடிகர் சங்கம் போன்ற அமைப்புக்கள் இது பற்றித் தீவிரமாகச் சிந்திக்கலாம். எந்த வழிகளில் நடவடிக்கைகளை எடுத்தால் நன்மை பயக்கும் என யோசிக்கலாம். ஒரு காரணம் எனக்குத் தோன்றுகிறது. நட்சத்திர அந்தஸ்து என்ற அந்தப் பளபளப்புக்குப் பின்னால் அவர்கள் தனிமையில் ஏங்கி வாடுகிறார்கள். நண்பர்கள் என்று கூறிக் கொண்டு வருகிறவர்கள் நண்பர்களே அல்ல; காரியார்த்தமாகப் பழகுவோரே என்று அவர்களுக்குத் தெரிகிறது. அந்தரங்கமாக மனம் விட்டுப் பேச அவர்களுக்கு யாரும் இல்லை. அதன் விளைவான தனிமை, அதைத் தொடர்ந்த சோகம் அவர்களை வாட்டுகிறது. அதை மறைத்துக் கொண்டு, பலர் வாழ்க்கை முழுதுமே நடித்துக் கொண்டுதான் வாழ்கிறார்கள். நடிப்பினால் வாழ்க்கை என்பது போய் வாழ்க்கையே நடிப்பாகி விடுகிறது. 'நடிப்பு வேண்டாம் நீயும் வேண்டும்' என்று தீர்மானித்து ஒருவருடன் தங்களைப் பின்னிப் பிணைத்துக் கொள்ளும்போது அந்த நிஜமே நிழலாகக் காண்கிறார்கள்.

கதை முற்றுப் பெறவில்லை. தொடரும் என்றே தோன்றுகிறது. வேறு பல நடிகையரும் லட்சுமிஸ்ரீயைப் பின்பற்றத் தயாராக இருக்கிறார்களாம். காவலனுக்கும் சரி, இந்தக் காரிகையருக்கும் சரி, நடிப்பில் உயரப் போக வேண்டுமே தவிர தூக்கில் தாழக் கூடாது என்பது எப்போதுதான் புரியப் போகிறதோ?

இறக்க வேண்டும் என்று நினைக்கும் நடிகையர் தற்கொலைக்குப் பிறகு தமது சுற்றத்தார் அடையப் போகும் துன்பத்தை ஒரு நிமிடம் நினைத்துப் பார்த்தால் போதும் அந்த எண்ணத்தைக் கைவிடுவார்கள். ஆனால் தங்களது சுற்றத்தார் அவஸ்தைப்படட்டும் என்பதற்காகவே தற்கொலை செய்துகொள்கிறவர்களும் இருக்கிறார்களே! - அசோக்குமார்

---

# அமெரிக்காவில் பட்டம் விடுகிறார்கள்!

சென்னை நகரில் மாஞ்சா தடவிய பட்டங்கள் ஆபத்தை விளைவிக்கும் என்பதால் தடை செய்யப்பட்டுள்ளன. ஆனால் அமெரிக்காவில் இதுபோல் மாஞ்சா தடவிய நூலால் மற்ற பட்டங்களை அறுத்து விடுவதில் உலகச் சாம்பியனாக தினேஷ் பகதூர் என்பவரைத் தேர்ந்தெடுத்திருக்கிறார்கள். இவர் இந்தியர்!

'ஒரு பட்டத்துடன் பறந்து செல்' என்ற பெயரில் அமெரிக்காவில் 1965-ல் ஒரு கடை திறக்கப்பட்டது. அந்த ஒரு வருடத்தில் மட்டும் 70 லட்சம் ரூபாய்களுக்குப் பட்டங்கள் விற்பனை ஆயின. அதைத் தொடர்ந்து அமெரிக்கா முழுவதும் சுமார் 90 பட்டக் கடைகள் திறக்கப்பட்டன.



'கைட்-லைன்ஸ்' என்ற பத்திரிகையும் ஆரம்பிக்கப்பட்டது. இனிவரும் ஆண்டுகளில் பட்டங்களின் விற்பனை சுமார் 150 கோடியாக அதிகரிக்கும் என எதிர்பார்க்கிறார்களாம். ஆங்காங்கே பட்டம் விடும் திருவிழா நடைபெறுகிறது.

ஒரே நூல் கயிற்றில் முப்பது பட்டங்கள் விடக்கூடிய முறையை வில்லோவன் என்பவர் தமது நூலில் விவரித்திருக்கிறார்.

பட்டத்தின் நூலுக்குக் கண்ணாடித்தூள் தடவும் முறை (மாஞ்சா போடுதல்) தாய்லாந்தில் தான் முதலில் ஏற்பட்டது. உலக சாம்பியன் தினேஷ் பகதூர் அமெரிக்காவில் பட்டங்கள் கடை வைத்துள்ளார். இவர் யாரும் செய்யாத சாதனையாகத் தபால் தலை அளவே உள்ள பட்டம் ஒன்றைச் சுமார் 200 அடி உயரத்தில் பறக்க விட்டிருக்கிறார்.

"கரங்கள் வழியே பட்டமானது நம் மனத்தையும் ஆத்மாவையும் தொடுகிறது" என்கிறார் தினேஷ் பகதூர்!

—ஜீவா தனசேகரன்

- கலிபோர்னியா நகரில் கப்பல் (பட்டம்) பறக்கிறது.
- குட்டிக்கரணம் போடும் மனிதப் பட்டம்
- ஒரே நூலில் முப்பது பட்டங்கள் பறக்கின்றன.
- நிஜக் கழுகல்ல; பட்டக் கழுகுதான்!







# வட்டமேஜை



● 13-7-80 தலையங்கத்தில் தாங்கள் குறிப்பிட்டிருப்பது போல கார்ல் மார்க்ஸ் உயிருடன் வந்தால் அதிர்ச்சியில் சாக மாட்டார். அரசுடைமைக் கொள்கைக்கு வித்திட்டு அவர் எழுதிய நூலுக்கு அவரே மிகக் கடுமையான எதிர்ப்புத் தெரிவித்து ஓர் அருமையான நூல் எழுதி, அதை அரங்கேற்றி ''தனியார் துறைத் தொழில்தான் நாட்டுக்கு நல்லது, அது தான் சரியான நடைமுறை'' என்று உலகுக்கு அறிவித்துவிட்டுப் பிறகுதான் நிம்மதியாக உயிர் துறப்பார்.

சென்னிமலை கே. சுப்பிரமணியம்

● அமெரிக்காவில் நமது ரூர்கேலா போன்ற எஃகு ஆலையில் சுமார் ஆறாயிரம் பேர்கள் தாம் வேலையில் இருப்பார்களாம். ரூர்கேலாவில் எத்தனை பேர் வேலை பார்க்கிறார்கள் தெரியுமா? 19,000 பேர்கள். சிந்திரி உரத் தொழிற்சாலையில் வேலை பார்க்கிறவர்களின் எண்ணிக்கை 7,000. அமெரிக்காவில் இதே போன்ற ஒரு தொழிற்சாலையில் ஆயிரம் பேர்கள்தான் வேலையில் இருப்பார்களாம். நமது பொதுத் துறை நிறுவனங்கள் ஏன் நஷ்டத்தில் நடக்கின்றன என்பது புரிகிறதல்லவா? 3500 கோடிரூபாய்களுக்கு மேல் விழுங்கியிருக்கும் நமது பொதுத் துறை நிறுவனங்கள் லாபம் அளிக்காவிட்டாலும் நஷ்டம் இல்லாமல் இருக்கக்கூடாதா?

கல்கத்தா-12 மிக்கி

● வாரம் 2 நாள் ஜாலிக்காக அரசு விடும் லீவு அல்ல! 35 கோடி அந்நியச் செலாவணி மிச்சமாகும் என்று பெட்ரோலியம் மந்திரி வீரேந்திர பாட்டீல் பொறுப்புடன் ஆய்வு செய்து கூறியிருக்கிறார்.

திருச்சி என். பானு

● இளமைர் எழுத்தாளர்கள் பகுதியும், வாரம் ரெண்டு நாள் லீவ் ஜோக்குகளும் அருமை.

செட்டிபாளையம் கு. நாகராசு

● துணுக்கு மன்னர் உ. ராஜாஜியைப் பற்றிய குறிப்பை ரசித்துப் படித்தேன். மற்றொரு துணுக்கு மன்னர் வெ. சீதாராமன் பற்றிய செய்திகளைத் தருவீர்களா? 'துணுக்குகள் எழுதுவது எப்படி?' என்ற புத்தகம் ஒருவர் எழுத, மற்றவர் அதற்கு முன்னுரை எழுதலாம்! இந்த அரிய யோசனையைக் கூறியதற்காக அந்தப் புத்தகத்தில் அவர்கள் என்னை நினைவுகூரலாம்!

விழுப்புரம் ஆர். மார்க்கண்டன்

● 'உறவின் கைதிகள்' எழுதும் ஜெயலலிதாவின் திறமை பாராட்டுக்குரியது. ராஜீவ் என்னும் டீன்ஏஜர் ஒளியில் உஷாவான விட்டில் பூச்சி மயங்கி விழுந்து விடுமோ?

சென்னை-35 சரோஜா ராஜாராமன்

● ரயில் பிரயாணக் கட்டணம் உயர்த்திட உத்தரவு இப்போதுதான் வந்துள்ளது. அதற்குள் 13–7–80 இதழிலேயே துணுக்குக்கு என்ன அவசரம்?

மேட்டுப்பாளையம் பி.ஏ. வஹாத்

● ''சஞ்சய் காந்தி வாழ்க்கை வரலாறு ஆரம்பமாகிறது'' என்ற அறிவிப்பைப் பார்த்ததும் துதி பாடும் வேலையை கல்கி தொடங்குமோ என்று நினைத்தேன். ஆனால் முதல் அத்தியாயத்தைப் பார்த்தவுடன் 'கல்கி', 'கல்கி'தான் என்று பெருமைப்பட்டுக்கொண்டேன் — நடுநிலையோடு திரு கஸ்தூரிரங்கன் தொடர்ந்து எழுதுவார் என்பது தெளிவாகத் தெரிகிறது.

அந்தியூர் மு. தவசியப்பன்





● ''விமான நிலையத்தை நிர்வகிப்பவர்களுக்கு சஞ்சய் காந்தி வந்துவிட்டார் என்றும் வயிற்றில் நெருப்பு'' போன்ற பட்டவர்த்தனமான உண்மையை எழுதிய அதே கட்டுரையாசிரியர் — ''அவருடைய பாட்டனார் பிரதமர் ஜவாஹர்லால் நேருவுக்குச் சமமான கீர்த்தியைப் பெற்று...'' என்று எழுதியிருக்கிறாரே — அதுதான் மனத்தை நெருடுகிறது.

வீரபாண்டி. வதிலை அன்புச்செல்வன்

● பலே ஆள் சார் நீங்க! முதல் பக்கத்தில் சஞ்சய் புராணம் ஆரம்பம். ஆனால் உள்ளே 'செம்பியன்' செய்திகள் வாசிக்கிறார் என்று. சஞ்சய் நிஜவாக இந்திரா காங்கிரஸார் ஆரம்பிக்கும் திட்டங்களை எள்ளமாய் கிண்டல் செய்திருக்கிறீர்கள்!

சிந்தாதிரிப்பேட்டை பா. உ. தயா

● சிறப்பாக இருந்த ஐந்து கதைகளுள் வாஸந்தியின் ''பூக்கள்'' ஏ-1. அதற்கு ஓவியர் திலகம் மாருதியின் படங்கள் அட்டகாசம்.

சென்னை-4 மயிலை ரகு

● எம். ஜி. ஆரின் மேகம் பொழியும் கருணை மழையைக் கருணாநிதியின் சூரியன் வயிற்றெரிச்சலுடன் பார்க்கும் கார்ட்டூன் ரொம்ப 'டாப்' சார். சிரித்துச் சிரித்து வயிறே புண்ணாகி விட்டது.

திருவனந்தபுரம் எஸ். எஸ். மணி

● கார்ட்டூன் கண்டேன்; எட்டா உயரத்திலிருக்கும் சூரியன் ஒன்றுக்கும் உதவாத கரித்துப்போன நீரை மேகமாக மாற்றி, தான் சஞ்சரிக்கும் வானத்துக்கு உயர்த்தியதை நீங்கள் மறந்தாலும் நாங்கள் மறக்கவில்லை. காற்று வீசத் தொடங்கினால் மேகம் சிதறியோடி இருக்கும் இடம் தெரியாமல் மறைந்து போகப் போவதை யாரும் தடுக்க முடியாது.

விருகம்பாக்கம் இர. தர்மாம்பாள்

● நீரே ஜெயலலிதா போன்றோருக்கு வாய்ப்பளித்துவிட்டுப் பிறகு அதைக் கிண்டல் செய்கிறீராக்கும். பிள்ளையையும் கிள்ளி விடுங்கள். பிறகு தொட்டிலையும் ஆட்டுங்கள்.

கிணத்துக்கடவு எம். ரமணி

● பி. கே. சுந்தரராஜன் தொகுத்து அளித்த தியாகையர் அருளிய தத்துவத் துளிகள் பத்துக்கும் க்ருதிகளின் பெயரைக் கீழே கொடுத்திருந்தால் மிகவும் உபயோகமாக இருந்திருக்கும்.

நாகப்பட்டினம் வி. அனந்தராமன்

● சென்னை நகர வீதிகளில் வலம் வந்தால் முன்பெல்லாம் துடிப்புள்ள சிறுவர்கள் ரேஸ் புத்தகம் விற்றுக்கொண்டிருப்பார்கள். கடந்த சில ஆண்டுகளாக வீதிகளில் லாட்டரிச் சீட்டுகள் விற்பனை துவங்கி 'சீரழிவு' விலைக்கு வருகிற அளவுக்கு வளர்ந்தது. இப்போது சில மாதங்களாக மது 'பெர்மிட்' மனுக்கள் வீதிகளில் விற்கப்படுகின்றன.

சென்னை-5 எஸ். வாணிசங்கர்

# சாம்பியன் கணவர்கள்!



※ ஈரோன் காலே

விம்பிள்டனில் பெண்களுக்கான ஒற்றையர் பந்தயம் நடந்து கொண்டிருந்தது. விடாது மழை பெய்தும் பிரிட்டிஷ் ரசிகர்கள் குடையைப் பிடித்துக் கொண்டு ஆவலோடு பார்த்துக் கொண்டிருந்தார்கள். இறுதி ஆட்டத்தில் ஆஸ்திரேலியாவைச் சேர்ந்த ஸ்ரீமதி ஈரோன் காலேயும் அமெரிக்காவைச் சேர்ந்த கிரைஸ் எவெர்ட் லாயிட்டும் போட்டியிட்டார்கள். இந்தப் பெண்கள் ஆட்டத்தைப் பார்வையிட்ட இரு பிரிட்டிஷ் ரசிகர்கள் தங்களுக்குள் பூரிப்புடன் சொல்லிக் கொண்டது:

''பிரிட்டன், பெண்கள் டென்னிஸில் இன்று உலகசாம்பியன்களைத் தயாரிக்க வில்லையானாலும் அவர்களுக்கு நல்ல கணவன்மார்களைத் தந்திருக்கிறது!''

ஆம்! ஆஸ்திரேலியாவைச் சேர்ந்த ஸ்ரீமதி ஈரோனின் கணவர் காலே பிரிட்டிஷ்காரர்; அமெரிக்காவைச் சேர்ந்த கிரைஸ் எவெர்ட்டின் கணவர் லாயிட்டும் பிரிட்டிஷ்காரர்தான்!

சொன்னவர்: டென்னிஸ் ஆர். கிருஷ்ணன்

தகவல்: குண்டூ'சீனி


விவ-சாயிகள்
SLV-3
ராக்கெட்டைப் பறக்க விட்டது சார்! மூட்டையை இறக்கிக் கொண்டாங்க!


இருந்தாலும் கிட்டகவே விஷமம் பண்றியே!
பாக் நாளிதழ்கள்
இந்திய நாளிதழ்கள்
நரசிம்ம ராவ்
இந்திய-பாக் நல்லுறவு


ரொம்ப செல்லம் கொடுத்துக் குழந்தையைக் கெடுத்துட்டீங்க... என் கண்ணுமணி.. வீரமணி
நீ தான் ஏகமாச் செல்லம் கொடுத்துக் குழந்தையைக் கெடுக்குறே!.. என் செல்வமணி.. வீரமணி!
வீரமணி

1980 ஜூலை 27
ரௌத்திரி ஆடி 12
மலர்: 38 இதழ்: 52



கல்கி



தமிழ்த்திரு நாடு தன்னைப் பெற்ற எங்கள் தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்

# வாழ்க வீரமணி!

திராவிட கழகத்தலைவர் வீரமணிக்கு நீண்ட ஆயுளையும் பூரண ஆரோக்கியத்தையும் அளித்து க்ஷேமமாக வைத்திருக்குமாறு எல்லாம் வல்ல இறைவனைப் பிராமணர்கள் பிரார்த்திப்பார்களாக!

பிராமணர்கள் ஆதிக்க எதிர்ப்பு மகாநாட்டினை ஜாம் ஜாம் என்று திருநெல்வேலியில் நடத்தியிருக்கிறார் வீரமணி. அப்படி நடத்தியதன் மூலம் பிராமணர்களுக்குத் தமிழகத்தில் ஏதோ கொஞ்சம் செல்வாக்கு இன்னும் பாக்கி இருக்கிறது என்று நினைவூட்டியிருக்கிறார். அதற்காக அவருக்குப் பிராமணர்கள் நன்றி கூறக் கடமைப் பட்டிருக்கிறார்கள். ''பிராமணராவது ஒன்றாவது? அவர்கள் ஆதிக்கம் நிலவிய காலமெல்லாம் மலையேறி விட்டது என்று இனியாரும் கூற முடியாது. அப்படி சொன்னால், ''இதைப் பாருய்யா! திராவிட கழகத் தலைவர் வீரமணி அவர்களே பிராமணர் ஆதிக்கம் இன்னும் இருப்பதாக ஒப்புக் கொண்டு அதற்கு எதிர்ப்பும் தெரிவித்திருக்கிறார். நீர் பிராமணர் காலம் மலையேறி விட்டது என்றால் என்ன அர்த்தம்?'' என்று பார்ப்பனர் திருப்பிக் கேட்கலாம்!

வீரமணி பிராமணர் ஆதிக்கத்தை மட்டும் எதிர்க்கவில்லை; பிள்ளைமார் ஆதிக்கத்தை எதிர்க்கிறார்; முதலியார் ஆதிக்கத்தை எதிர்க்கிறார்; செட்டிமார் ஆதிக்கத்தை எதிர்க்கிறார். இன்னும் என்னென்ன ஜாதியினர் உண்டோ அவர்கள் அனைவரது ஆதிக்கத்தையும் எதிர்க்கிறார். எந்த ஜாதியினரின் ஆதிக்கமும் கூடாது என்று கருதி அதற்காக அருமையான திட்டம் வகுத்திருக்கிறார். அதாவது இருக்கிற வேலை வாய்ப்புக்களையும் பள்ளி, கல்லூரிகளில் இருக்கிற இடங்களையும் பல்வேறு ஜாதியினருக்கும் ஜனத்தொகையில் அவரவர் விகிதாசாரப்படி பகிர்ந்து கொடுத்து விடவேண்டும். இதுதான் அவரது அற்புதமான யோசனை. இதன்படி நூறு வேலைகள் இருந்தால் அல்லது ஒரு கல்லூரியில் நூறு இடங்கள் இருந்தால் முதலியாருக்கு ஐந்து செட்டிமாருக்கு நாலு நாடாருக்கு மூன்று முஸ்லிம்களுக்கு இவ்வளவு கிறிஸ்துவருக்கு அவ்வளவு ஹரி ஜனங்களுக்கு இத்தனை பிள்ளைமாருக்கு அத்தனை என்று ஸ்தானங்கள் ஒதுக்கப்படவேண்டும். பிராமணருக்கு மூன்று இடங்கள் கிடைக்கும். அவர்கள் அதில் ஐயருக்கு இவ்வளவு ஐயங்காருக்கு இவ்வளவு என்றும் அதனை மேலும் பங்கிட்டு, தென்கலை வடகலைக்கு இத்தனை இத்தனை யென்றும் கொடுத்துக் கொள்ளலாம்!

நாமெல்லோரும் ஒரே மனுஷ ஜாதிதான் என்று அசட்டுத்தனமாக எண்ணிக் கொண்டிருக்கிறோம். இனியேனும் வீரமணியின் திட்டப்படி அவரவரும் தத்தமது ஜாதியை மறந்து விடாமல் கெட்டியாகப் பிடித்துக் கொள்ளலாம். தங்கள் ஜாதியைவிட வேறு ஒரு ஜாதியின் பெயரைச் சொன்னால் வேலை கிடைக்கும் அல்லது கல்லூரியில் இடம் கிடைக்கும் என்று தோன்றினால் சட்டென்று கட்சி மாறுவது போல ஜாதிமாறி விடவும் செய்யலாம். இதற்கு பெர்மிட்டுகளை வழங்கத் தாசில்தார்களுக்கு அதிகாரம் அளிக்கலாம். ஏற்கெனவே மது பெர்மிட்டினால் வளம் பெற்று வருகிற அவர்களுடைய வாழ்க்கைத்தரம் இதனால் மேலும் உயரும். ஜாதிமாறும் பெர்மிட்டுக்கு முப்பது ரூபாய் என்று நிர்ணயித்தால் அரசுக்கும் வருவாய் பெருகும்.

சட்டசபை ஸ்தானங்களையும் இதே ஜாதி அடிப்படையில் ஒதுக்கி விடலாம். திறமை, நேர்மை, செல்வம், செல்வாக்கு என்றெல்லாம் பார்த்துக் குழம்பிக்கொண்டிராமல் ஒவ்வொரு கட்சியும் வீரமணி விகிதாசாரப்படி வேட்பாளரைத் தேர்ந்தெடுக்கலாம். அப்படி செய்தால் கட்சி மாறும் கொடுமை நீங்கி ஜாதி மாறும் நிலை மட்டுமே இருக்கும். 'இது மட்டும் நீடிக்கலாமா? அடிக்கடி ஜாதி மாறுவது மட்டும் நல்லதா?' என்று யாரும் குழம்ப வேண்டாம். ஏனென்றால் ஜாதி வித்தியாசம் அடியோடு ஒழிய வீரமணியின் திட்டத்தைவிடச் சிறந்த மார்க்கம் ஒன்று இருக்கவே முடியாது. எப்படியெனில் நாம் எல்லோரும் ஒட்டு

மொத்தமாக மிருக ஜாதியாகி அதற்கேற்ப நடந்து கொள்ள இத் திட்டம் வழி வகுத்துவிடும். ஜாதிப் பிரிவினை போன்ற மூட நம்பிக்கைகளை ஒழிக்கப் பாடுபட்ட பெரியாரின் ஆன்மா குளிர்ந்து விடும்!

எம்.ஜி.ஆரின் அமைச்சரவையில் பிராமண அமைச்சருக்கு இடமளித்ததற்காக வீரமணி கோபித்துக் கொண்டிருக்கிறாரே, அதை மட்டும் நாம் ஏற்பதற்கில்லை. வீரமணியின் கூற்றுப்படியே பார்த்தாலும் அமைச்சரவையில் பிராமணருக்கு மூன்று சதவீதம் இடமுண்டு. ஆக, அமைச்சரவையில் இருபது அமைச்சர்கள் இருப்பதாக வைத்துக் கொள்வோமானால் அவர்களில் 3/5 அமைச்சராவது பிராமணராக விளங்க உரிமை உண்டு! எனவே 3/5 பங்கு பிராமணரும் 2/5 பங்கு வேறு ஜாதியினரும் கலந்த ஓர் அமைச்சரை உருவாக்க எம். ஜி. ஆர். பிளாஸ்டிக் ஸர்ஜன் ஒருவரின் உதவியை நாடினாலும் நாடலாமே யொழியப் பிராமணருக்கு அமைச்சரவையில் இடமில்லை என்று கூறி விடமுடியாது!

---



**ம**த்தியில் ஆட்சியில் உள்ள கட்சியேதான் மாநிலங்களிலும் ஆட்சி புரிய வேண்டும். அப்போதுதான் நிலையான நல்லாட்சி நடக்கும் என்றெல்லாம் கூறிவந்தவர்கள் வாயில் சர்க்கரையை அள்ளிப் போடலாம் என்றால் சர்க்கரை விலை கிலோ எட்டு ரூபாய் விற்கிறதே. அதனால் மண்ணையே அள்ளிப் போட்டு விடலாம் என்று தீர்மானித்து ஆந்திர மாநில அமைச்சர்கள் பலரும், இ. காங்கிரஸ் சட்ட சபை உறுப்பினர்கள் பலரும் சேர்ந்து முதல்வர் சென்னா ரெட்டி மீது புகார்கள் எழுப்பி, கையெழுத்துப் படலம் தொடர்ந்து, டில்லிக்குப் படையெடுத்து, மேலிடத்தில் கோரிக்கையும் சமர்ப்பித்து விட்டார்கள். பாவம், பிரதமருக்குத்தான் புகார்களைக் கவனிக்க நேரமில்லை. இதற்கிடையில் சென்னா ரெட்டி கொஞ்சமும் அசைந்து கொடுப்பதாகத் தெரியவில்லை. கவலைப்பட ஒன்றுமில்லை என்று சர்வ சாதாரணமாகக் கூறி வருகிறார். மனுஷனுக்கு ரொம்பத்தான் நெஞ்சழுத்தம்!

அந்த மன உறுதி தமிழகத்துக்கு வந்து ஹாஜா ஷெரீப் தேர்தலை யொட்டி அடிதடி கண்டு அலறித் திரும்பிய குண்டு ராவுக்கு இல்லை. அவரை ஆந்திரத்துக்கும் அனுப்பியது இந்திரா காங்கிரஸ் மேலிடம். அவருக்கு ஒரே திகில்! கர்நாடகத்திலேயே தம்மீது புகார்களைக் கிளப்பிக் கொண்டிருக்கும் இந்திரா கட்சிக்காரர்கள் இருக்க ஆந்திர இந்திரா காங்கிரஸின் உட்பூசலை நாம் எங்கே தீர்த்து வைப்பது என்று எண்ணிப் பட்டும் படாமலும் நழுவிவிட்டார்.

இதையெல்லாம் தூக்கி அடிப்பதாக இருக்கிறது அகில இந்திய இ. காங்கிரஸ் பொதுக் காரியதரிசி சியாம்சுந்தர் மோகனபத்ராவின் கூற்று. ஆந்திராவில் நெருக்கடி கட்சியின் உள் விவகாரம் என்று ஒரு போடு போட்டிருக்கிறார். பதினைந்து அமைச்சர்களும் துணை சபாநாயகரும் போர்க் கொடி எழுப்பிய பின் அது எப்படி மாநில ஆட்சியைப் பாதிக்காமல் கட்சியின் உள் விவகாரமாக மட்டும் இருக்க முடியும் என்று புரியாமல் தவிக்கிறோம்.

இன்று சென்னா ரெட்டி மீது சுமத்தப்பட்டுள்ள பல புகார்கள் ஏற்கனவே ஜனதா எதிர்க் கட்சியினர் எழுப்பியவைதாம். இன்று அவர் கட்சியைச் சேர்ந்தவர்களே சொல்கிறார்கள். புகார்களில் உண்மை இல்லை என்று அப்படியே ஒதுக்கி விட முடியாது என்பது ஒருபுறமிருக்க, இந்திரா காங்கிரஸில் உட்கட்சி ஜனநாயகம் வலுவடையாத வரையில் ஒருவர் முதல்வராவதும் சில காலத்துக்குள் அவரைக் கவிழ்க்க மற்றவர் சூழ்ச்சி செய்வதும் நீடிக்கவே செய்யும். மாநிலத்தின் முன்னேற்றம் பாதிக்கப்படும். இப்போதும் கூட மேலிடம் அடுத்த முதல்வரை நியமிப்பது பற்றித்தான் யோசிக்கிறதே தவிர, சட்ட சபைக் கட்சித் தலைவர் தேர்தலை நடத்த எண்ணமில்லை!

• • •

**ந**ட்வர்லால் என்று ஒரு போக்கிரி. இவன் இந்தியாவின் பல பாகங்களில் மோசடி வேலை செய்து தன் சாமர்த்தியத்தைக் காட்டியிருக்கிறான். பதினாறு தடவை சிறையிலிருந்து தப்பியிருக்கிறான்! கடைசியாக இப்போது சிறுநீரகக் கோளாறு என்று சொல்லிச் சிறையிலிருந்து மருத்துவ மனைக்கு வந்து சேர்ந்தான். போலீஸார் கண்ணில் மண்ணைத் தூவி விட்டுத் தப்பிவிட்டான்! வயது 65. ஐந்தடி உயரம்தான்! இவனை ஆஸ்பத்திரியில் காண வந்த மனைவி மூலம் ஏதாவது விவரம் அறியலாம் என்று பார்த்தால் நட்வர்லாலுடன் சேர்ந்து அவளையும் தேட வேண்டிய நிலையில் தான் உள்ளனர்! மித்லேஷ் குமார், ரவீந்தர் பிரசாத், சியாம் சுந்தர் என்று வேறு பல பெயர்களும் நட்வர்லாலுக்கு உண்டு! ஒரு வேளை காண நேர்ந்தால் சொல்லுங்கள்!

டில்லி — பம்பாய் நட்வர்லாலுக்குத் தமிழன் தாழ்ந்து போகலாமா? என்பது போல் எம். எல். ஏ. ஒருவரிடமிருந்தே ஐம்பது ரூபாயைப் பிக்பாக்கெட் செய்துவிட்டான் ஒரு பலே போக்கிரி! அதுவும் தாமரைக்கனி நோட்டைப் பறிகொடுத்தது தமிழக சட்ட

மன்றத்தின் எல்லைக்குள்ளேயே என்பதை நோக்குமிடத்து மூக்கின் மேல் விரலை வைக்கத்தான் வேண்டியிருக்கிறது.

• • •

இதுபோன்று மோசடிகளும் திருட்டுக்களும் சாமர்த்தியமாக நடப்பதை ஏற்க இயலாவிடினும் வியக்க முடிகிறது. ஆனால் கூவத்தில் சடலம், வேப்பந்தட்டை கிராமத்தில் குழந்தைகள் பலி என்றெல்லாம் படிக்கும்போது வேதனை நெஞ்சைப் பிழிகிறது. இரண்டுமே விவரிக்கவொண்ணாக் கோரக் கொலைகள். எண்ணிப் பார்க்கவும் அஞ்ச வைக்கும் அநாகரிகங்கள். தமிழக போலீஸ் திறம்படவும் துரிதமாகவும் இயங்கி மக்களின் மதிப்பில் உயரட்டும்.

• • •

அரசுடைமையான நிலக்கரிசுரங்கங்களில் நடக்கும் தில்லு முல்லுகள் பற்றி அண்மையில் தலையங்கம் எழுதியிருந்தோம். இந்த வாரம் அரசுத் தொழிலகமான ஹிந்துஸ்தான் ஃபோட்டோ ஃபிலிம் நிறுவனத்தில் தில்லு முல்லு நடந்ததாகச் செய்தி!

ஃபோட்டோஃபிலிம் விலை உயர்வுக்கு முதல் நாள் ஜூன் 30ந் தேதி நள்ளிரவில் 4000 முதல் 5000 ரோல்கள்வரை — 26 லட்சம் பெறுமானமுள்ள சினி பிலிம்களை — லாரிகளில் கடத்திக் கொண்டு போய்விட்டார்கள். உயர் அதிகாரிகளும் இதற்கு உடந்தையாம். மத்திய சட்ட அமல் ஏஜென்ஸி விசாரணை நடத்தி வருகிறது!

ஏதோ சினிமாக் கதை போலிருக்கிறதல்லவா இந்த சினிமா ஃபிலிம் கொள்ளைச் செய்தி? இது போன்ற நஷ்டங்களைத் தாங்க வேண்டியது வரி கொடுக்கும் நாம்தான் என்று உணர்ந்தால் கதை சுவைக்காது!

• • •

தகப்பனார் செய்து வந்த வேலை அவருக்குப் பின் மகனுக்கு வழங்கப்பட வேண்டும் என்று உரிமை கொண்டாடுவது தவறு என்கிறார் எம். ஜி. ஆர். ஒப்புக் கொள்கிறோம். பாங்குகளிலோ, போலீஸிலோ அல்லது வேறு தொழிலகங்களிலோ இப்படி அப்பன் இடத்தில் பிள்ளை என்று வேலைக்கு யாரும் உரிமை கொண்டாட வேண்டாம்தான். வேறு பலருடன் போட்டியிட்டுத் தகுதி அடிப்படையில் அதே வேலையையோ அல்லது வேறு வேலையையோ அவன் பெறுவதே நியாயம்.

ஆனால் அதற்கும் ராஜாஜி கொண்டுவந்த தொழில் கல்வித் திட்டத்துக்கும் முதல்வர் முடிச்சுப் போடுவது வியப்பாயிருக்கிறது. ராஜாஜி, ஒரு வேளை படிப்பு, ஒரு வேளை தொழில் என்றார். அவர் திட்டம், இருக்கிற பள்ளிகளையும் ஆசிரியர்களையும் வைத்துக் கொண்டே இரட்டிப்பு எண்ணிக்கையில் மாணவர்களுக்கு நவீன கல்வி போதிக்க வழி வகுத்தது. அதே நேரத்தில் உடல் உழைப்பின் மகத்துவத்தை அவர்களுக்கு உணர்த்தியது. தொழில் அறிவையும் ஆர்வத்தையும் பெருக்கியது. எந்தத் தொழிலானாலும் அதில் இழிவில்லை என அறிவுறுத்தியது. குமாஸ்தா மனப்பான்மையை விரட்டியடிப்பது. தொழில் உற்பத்திக்கும் பொருளாதார வளர்ச்சிக்கும் உதவுவது. வேலையில்லாத் திண்டாட்டத்தைப் போக்குவது.

தொழிற் கல்வித் திட்டத்தைக் குலக் கல்வித் திட்டம் என்று பெயர் சூட்டி ஒதுக்கியது அன்றைய பொறாமை அரசியலுக்கு வசதியாய் இருந்தது. அவ்வளவுதான். ஆனால் அதனினும் சிறந்த கல்வித் திட்டத்தை இருக்கிற வசதிகளைக் கொண்டே தமிழக மக்களுக்கு அளிக்க ஆயிரம் எம். ஜி. ஆர்கள் வந்தாலும் முடியாது.

ஒரு வேலைக்கு உரிமை கொண்டாடுவது என்பது வேறு. பரம்பரைத் தொழிலை அதில்



நட்வர்லால்

பற்றும் பெருமிதமும் கொண்டு விரும்பிக் கற்பது வேறு.

• • •

ஹரிஜன் என்ற பெயர் உதவாது என்று இன்னொரு பொன் மொழியை உதிர்த்திருக்கிறார் முதல்வர். தாழ்த்தப்பட்ட வகுப்பினரிலும் தாழ்ந்து, தீண்டாதார் என்றும் வேறு விதமாகவும் மக்கள் இவர்களைக் குறிப்பிட்டு வந்தபோது மகாத்மா அவர்கள் இறைவனின் குழந்தைகள் என்று பொருள்பட ஹரிஜனங்கள் என்றார். அந்த ஒரு சொல் மூலமே அவர்கள் மதிப்பை வானளாவ உயர்த்திக் கௌரவம் அளித்தார். இப்போது அந்தச் சொல் வேண்டாம் என்கிறார் எம். ஜி. ஆர். வேறு புதுப் பெயர் யோசிக்க வேண்டுமாம்! யோசியாமல் பேசியிருக்கிறார். ஹரிஜனங்கள் என்பதற்குப் பதில் அரசஜனங்கள் என்பதா? பெயர் மாற்றத்தினால் அவர்கள் நிலை உயர்ந்துவிடப் போவதில்லை. அவர்கள் வாழ்க்கை நிலை உயர விசேஷ சலுகைகள் காட்டப்படும் வரை அவர்களைக் குறிப்பிட ஒரு பெயரும் இருக்கத்தான் வேண்டும். அந்தப் பெயர் ஹரிஜன் என்றிருந்தால் என்ன? இதைவிட உயர்ந்த பொருள் பொதிந்த பெயரை யார் அவர்களுக்குச் சூட்டிவிட முடியும்?

## செய்திகள் வாசிப்பது செம்பியன்

# புன்னகை ஒரு கலை!





கார்ட்டூனிஸ்ட் சங்கர் சில வாரங்களுக்கு முன்பு வார்சாவில் (போலந்து) ஒரு விருது பெற்றார். குழந்தைகளுக்குச் சிறந்த பணி ஆற்றியவர்களுக்கு வழங்கப்பெறும் ''ஆர்டர் ஆப் ஸ்மைல்'' விருது. குழந்தைகள் பங்கேற்கும் இந்த விருது தரும் விழா இப்படி நடந்தது.

விருதுச் சின்னமான சிரிக்கும் சூரியன் படம் தீட்டிய ஒரு பதாகையை ஏந்திய ஒரு சிறுவன் மேடை ஏறி மூன்று முறை தட்டு. ''அமைதி! அமைதி! சங்கர் இங்கே இருக்கிறாரா?'' என்று கூவினான்.

கூட்டத்தில் கீழே இருந்த சங்கர், ''இதோ இருக்கிறேன்'' என்றார்.

இருபுறமும் இரண்டு சிறுவர் அணிவகுத்து வர, சங்கர் மேடை ஏறினார்.

விழாத் தலைவர், சங்கரை அழைத்து அவர் சட்டையில் விருதுச் சின்னப் பதக்கத்தை அணிவித்தார். பிறகு இவ்வாறு கூறினார்: ''சங்கர் அவர்களே! இது முதல் நீங்கள் சிரிப்புப் படையில் ஒரு வீரன் என்று அறிவிக்கிறேன். நீங்கள் இனி என்ன நேர்ந்தாலும் எப்போதும் புன்னகையுடன் இருப்பதாக உறுதி எடுத்துக் கொண்டு குழந்தைகளுக்கு உற்சாகமூட்ட வேண்டும்.''

''ஆகா, அப்படியே!'' என்றார் சங்கர்.

உடனே ஒரு சிறுவன் மேடை ஏறி வந்தான். கையிலே ஒரு தட்டு. அதிலே ஒரு கிளாஸ் பானம். ''இந்த எலுமிச்சம் பழ ரசத்தை சங்கர் அருந்தட்டும். இதிலே இனிப்பு இல்லை. இவர் உறுதிமொழிப்படி சிரிக்கிறாரா பார்ப்போம்'' என்றான்.

சங்கர் அந்தப் புளிப்புப் பானத்தை மட மடவென்று குடித்தார். வசீகரமான புன்னகை ஒன்றை வீசினார். மண்டபம் அதிரச் சிரிப்பு. கைதட்டல், பாராட்டுகள்! -டி.எஸ்.வி.

# நீரோட்டம்



இரு புது முகங்கள் அபாரமாக நடித்திருக்கின்றனர். திருமுருகன், விஜயகாந்த்.

பத்மப் பிரியா, கதாநாயகி, கல்லூரி மாணவிக்கேற்ற "சிக்'' உருவ அமைப்பு, கவர்ச்சி இரண்டும் இவருக்குத் துணையாக இருக்கின்றன. பிரவீணாவுக்கு அதிக வேலை இல்லை.

மேடை மெல்லிசைப் பாடகர் ஏ. வி. ரமணன் முதல் முறையாக இப்படத்துக்கு இசை அமைத்திருக்கிறார். வெற்றியும் பெற்றிருக்கிறார்.

பண்ணையார் மகன் குமாருக்கும் கண்மணிக்கும் திருமணம் நிச்சயிக்கப்படுகிறது. திருமணத்துக்கு முன்பே கண்மணி கருவுற்று விடுகிறாள். எதிர்பாராத விதமாக, குமார் பகைவனால் ஆற்று வெள்ளத்தில் தள்ளப்படுகிறான்; கண்மணிக்குக் குழந்தை பிறக்கிறது; கல்லூரி நாட்களில் அவளுடன் படித்த கண்ணன் அவள் நிலைமையை அறிந்து அவளை மணக்க முன்வருகிறான்; திருமணம் நடந்து விடுகிறது. இந்தச் சீர்திருத்த முடிவுடன் படம் முடிந்திருந்தால் நன்றாயிருந்திருக்கும். பண்ணையார் மகன் குமார் ஆற்று வெள்ளத்தில் சாகவில்லையாம்; தப்பிப் பிழைத்து அதிர்ச்சியில் கிடந்து மீண்டு தன்னை ஆற்று வெள்ளத்தில் தள்ளியவனோடு பயங்கரச் சண்டையிட்டு அவனைக் கொன்று, கொலைக் குற்றத்துக்காகக் கைது செய்யப்படுகிறான். இப்படி அநாவசியமாக ஓர் அசட்டு முடிவை ஏற்படுத்திப் படத்தைப் பாழாக்கி விட்டார்கள்.

என்ன செய்ய, எப்போதும் நீரோட்டம் சீரோட்டமாக இருக்க முடியாதே. -காந்தன்



# ஈரோட்டில் ஓர் இயந்திர சாதனை!

'ஈரோடு' என்றவுடனே நமது பெருமதிப்பிற்குரிய தந்தை பெரியார் ஞாபகமும், தொழில் துறையில் மங்கையர் விரும்பும் மணமிகு கஸ்தூரி மஞ்சளின் நினைவும் வரும். சமீபகாலமாக, இந்த ஊர் மாவரைக்கும் இயந்திரங்களுக்குப் பெயர் பெற்று விளங்கும்படி செய்த அரும் சாதனைக்கு உரியவர், ஈரோடு தொழிலதிபர் திரு. K. A. **சண்முகம்** ஆகும். மிக எளிய நிலையிலிருந்து தனது அயராத உழைப்பினால் இன்று மூன்று நிறுவனங்களைத் திறம்படக் கட்டிக் காத்து வரும் திரு. K. A. சண்முகத்தின் செயல் திறனும், உழைப்பும் பிரமிக்கத்தக்கதாகும்.



குடும்பத்தில் ஆணும் பெண்ணும் இருவருமே வேலைக்குப் போகவேண்டிய இந்த நெருக்கடியான பொருளாதாரச் சூழ்நிலையில், வீட்டிற்கு உறுதுணையாக மாவரைக்கும் இயந்திரம் உள்ளது என்பதை உணர்ந்த திரு. K. A. சண்முகம், தமது K. A. S. கம்பெனியில் இந்த இயந்திரங்களைத் தயாரிக்க நினைத்தது முன்யோசனை மிகுந்த திட்டமாகும். அவர்கள் தயாரிக்கும் ''K. A. S.'' மற்றும் "**பிருந்தா**" மாவரைக்கும் இயந்திரங்கள் இந்தியா மட்டுமின்றி இலங்கை, மலேசியா போன்ற வெளிநாடுகளுக்கும் ஏராளமாக ஏற்றுமதி ஆகின்றன. சிறந்த அமைப்பும், சீரான இயக்கமும், சுத்தமான அரைவைத் திறனும் K. A. S. இயந்திரங்களின் தனிச் சிறப்பாகும்.



30 லிட்டர் கொள்ளளவு உடைய ராட்சத இயந்திரங்கள் முதல் 1½ லிட்டர் அளவுள்ள சிறிய இந்திரங்கள் வரை தேவைக்கேற்ப பல்வேறு வகையான மாவரை இயந்திரங்களை ஈரோடு, காவேரி ரோடிலிருக்கும் K. A. S. **பிரதர்ஸ்**, K. A. S. **அண்டு சன்ஸ்**, மற்றும் K. A. S. **இண்டர்நேஷனல்** ஆகிய நிறுவனங்களின் மூலம் திரு. K. A. சண்முகம் தயாரித்தளிக்கிறார். 'K. A. S.' இயந்திரங்களில் 'பிவல்' கியரும், உலகப் புகழ்பெற்ற 'டிம்கன் பேரிங்'கும் பொருத்தப்படுவதால், அவை நீடித்த உழைப்பையும், சீரான ஓட்டத்தையும் தருவதோடு, தேய்ந்துபோன பாகங்களைச் சீரமைத்துப்போடும் adjustment fitting-ம் கொண்டவை..



'பிருந்தா' மெஷினில் உள்ள ''Feed கண்ட்ரோல் லீவர்'' கையரவையின் ருசியைத் தருகிறது.

K. A. S. நிறுவனங்களின் அதிபரான திரு. K. A. சண்முகம், முன்னேறத் துடிக்கும் இளைஞர் சமுதாயத்திற்கு ஒரு முன்னோடி. சொந்த முயற்சியினாலும், பாசமிக்க அவரது சகோதரர்களான திருவாளர்கள் K. A. **சுப்பிரமணியம்**, K. A. **கந்தசாமி** மற்றும் அன்பு மகன் **'செல்வம்'—எஸ். பாண்டுரங்கன்** இவர்களது அயராத ஒத்துழைப்பினாலும் அவர் பலப்பல புதிய மாவரை இயந்திரங்களைக் கண்டுபிடிக்க முடிந்தது.

உழைப்பதற்குச் சலிக்காத திரு. K. A. சண்முகம் மேலும் இத்தகைய தொழில் முயற்சிகளில் ஈடுபட்டு தமிழ்நாட்டுக்குப் புகழ் சேர்ப்பார் என்றால் நமக்கெல்லாம் பெருமைதானே!

**வா**ழ்க்கைத்தரத்தை உயர்த்திக்கொள்ள வேண்டும் என்ற எண்ணத்தில்தான் கணவன், மனைவி இருவரும் வேலைக்குப் போக ஆரம்பிக்கிறார்கள். வாழ்க்கைத் தரத்தை உயர்த்துவது என்றால் வெறும் ஆடம்பரப் பொருள்களை வாங்கிக் குவிப்பது அல்ல. வீட்டில் உள்ள ஒவ்வொருவரும் நல்ல உடல், மன ஆரோக்கியத்தோடு நன்றாக இருக்க வேண்டும். அதுதான் வாழ்க்கைத் தரம்.

பேசத் தெரிவதற்கு முன்பே குழந்தை தன்னிடம் எல்லோரும் அன்பு காட்ட வேண்டும் என்று நினைக்க ஆரம்பித்து விடுகிறது. தாயின் தனிப்பட்ட அன்பை எதிர்பார்க்கிறது. தாய் தன்னை எடுத்துக் கொஞ்ச வேண்டும், தன் தேவைகளை அவளே கவனிக்க வேண்டும் என்றெல்லாம் அது நினைக்கிறது.

இம்மாதிரி தாய் நடந்து கொண்டால் குழந்தை மிகவும் வளர்த்தியாக இருப்பதைக் காணலாம். இதற்கு மாறாகச் சில வீடுகளில் மிகவும் விலை உயர்ந்த பொருள்களைக் குழந்தைக்குக் கொடுத்தால் அது வளர்த்தியாக இருக்கும் என நினைத்துத் தாய் படாத பாடு பட்டு நேரம் தெரியாமல் உழைத்து அவைகளை வாங்கி வேலைக்காரியிடம் கொடுத்து, 'குழந்தைக்குக் கொடுத்துவிடு' எனச் சொல்கிறாள். அவளுக்கு நேரம் இல்லாத குறை. ஆனால் எவ்வளவுதான் உயர்ந்த பொருளாயினும் தாயினால் கொடுக்கப்படாதது குழந்தைக்கு ஒட்டுவதில்லை. இந்த ஏக்கம் குழந்தையின் உடல் வளர்ச்சியை மட்டுமல்ல, மூளையையும் தாக்குகிறது. சிறு பருவம் முதலே ஒரு விரக்தி; தன்னை யாரும் கவனிப்பதில்லை என்ற உணர்வு ஏற்பட்டுவிடுகிறது.

வேலைக்குப் போகும் தாயாக இருந்தால் குழந்தைகள் குறைவாக இருந்தால்தான் அவற்றுக்கு அவள் போதிய கவனத்தைத் தர முடியும். மேலும் இரு குழந்தைகளுக்கு இடையே கணிசமான இடைவெளி இருந்தால்தான் முதல் குழந்தை தம்பி அல்லது தங்கையிடம் கோபப்படாமல், பொறாமை கொள்ளாமல் இருக்கும். குழந்தைகள் எண்ணிக்கையில் குறைவாக இருந்தால் சிறப்பான மருத்துவ வசதி, சிறப்பான கல்வி முதலியன அளிக்க முடியும். ஆரோக்கியமான, நல்ல அறிவுள்ள பிரஜைகளை உருவாக்கலாம். ஒவ்வொரு பெற்றோரும் நாட்டுக்குச் செய்ய வேண்டிய தொண்டு இது.

அன்பைக் கொடுத்து அன்பைப் பெறுவது நம் பண்பாடு. குழந்தைகளை அன்பை ஊட்டி நாம் வளர்த்தால்தான் நம்முடைய வயது காலத்தில் அவர்கள் நன்றியுடன் நம்மைக் காப்பாற்றுவார்கள்.

தனிக் குடித்தனம் வைத்துக் கணவன்—மனைவி இரண்டு பேரும் வேலைக்குச் செல்வதால் குழந்தைகளுக்கு நம் பழக்க வழக்கங்கள், நம் கலாசாரம் இவைகளைச் சொல்லிக் கொடுக்க இயலுவதில்லை. காரியாலயம் செல்பவர்களுக்கு இதற்கெல்லாம் நேரம் இருக்காது. வீட்டில் தாத்தா, பாட்டி இருந்தால் இந்த விஷயங்களைக் கதையாகவே சொல்லிப் புரிய வைப்பார்கள். ஆனால் கூட்டுக் குடும்ப முறை இப்போது மாறி வருகிறது.

தந்தையும் தாயும் பொருளீட்டப் பறந்து கொண்டிருப்பது, தன் நலனுக்காகத்தான் என்று குழந்தை உணர்வதில்லை. தன்னைப் புறக்கணிக்கிறார்கள் என்ற நினைப்பு சில குழந்தைகளுக்கு ஏற்படுகிறது. உயர்ந்த குறிக்கோள்களை வளர்க்கும் சிந்தனைகள் கொடுக்கப்படாததால் அவர்களுடைய மனம் திசை தெரியாமலும் திரிகிறது. புத்திகூர்மையான குழந்தை தாய் தந்தையரின் நேரமின்மை, அவர்களுக்குத் தன் மேல் உள்ள பாசம் போன்றவைகளை உணர்ந்து அளவுக்கு மீறிய உரிமைகளை எடுத்துக்கொள்கின்றது. அடம் பிடித்தோ, கெஞ்சியோ பணம் வாங்கிக் கொள்கின்றது. கண்டவற்றை வாங்கித் தின்பது, புகைப்பது போன்ற பழக்கங்கள் பிஞ்சு உள்ளத்தில் படிந்து விடுகின்றன. கொள்கை குறிக்கோள் ஏதும் இல்லாமல் வளர்வதுதான் குழந்தைகளின் இந்தப் பலவீனத்துக்குக் காரணம்.

பெரியவர்களுடன் வாழ்வது குழந்தைகளுக்கு மன ஆரோக்கியத்தைத் தரும். அற்ப ஆசைகளுக்கு அடிபணியாமல் குழந்தைகள் உயர்வாக உருவாக வழி செய்யும். இதில் பெரியவர்கள் ஒத்துழைப்பும் தேவை. அவர்கள் நல்ல கதைகளைக் கூறிக் குழந்தைகளை உயர்வாக வளர்க்க முனைய வேண்டும். சம்பாதித்து வரும் மருமகளுக்கு நிம்மதி பிறக்கச் செய்ய வேண்டும். இதற்கு மாறாகச் சில இல்லங்களில் பெரியவர்கள் வேலைக்குப் போகும் மருமகளை ஓயாமல் குற்றம் சொல்லி அவள் மனத்தைப் பேதலிக்கச் செய்து மன வியாதிக் காரியாக்கி விடுகிறார்கள்!

தகவல்: டாக்டர் **சௌரிராஜன்**
எம். எல். ஏ.

பேட்டி: **குமிலி ராஜேஸ்வரி.**



டாக்டர் பேசுகிறார்

# வாழ்க்கைத் தரம் எதில்?

# புதிய கோல்கேட் ஃப்ளோரிகார்ட் டூத்பேஸ்ட்







குழந்தைகளுடைய பற்களின் மென்மையான எனுமல் எளிதில் துவாரங்களுக்கும், சிதைவுக்கும் உள்ளாகிறது. பெரியவர்களுக்கும் பற்சிதைவுக்கு எதிராகப் பாதுகாப்பு தேவை. புதிய ஃப்ளோரிகார்ட் டூத்பேஸ்ட் பல் துவாரங்களுக்கும், பற்சிதைவுக்கும் எதிராக உங்கள் குடும்பத்தினருக்கு நிச்சயமான பாதுகாப்பைத் தருகிறது. துவாரங்களையும், பற்சிதைவையும் உண்டாக்கும் வாய் அமிலங்களுக்கு எதிராகப் பற்களை உறுதிப்படுத்துவதற்கென பல் எனுமலுடன் இணைந்து செயல்படும் விசேஷ கோல்கேட் எம்எஃப்பி ஃப்ளோரைட் அதில் உள்ளது. கோல்கேட் ஃப்ளோரி கார்ட் புல்லரிக்கும் புதுச்சுவை கொண்டது. உங்கள் குடும்பத்திற்கு இன்றே வாங்குவீர்.







உலகெங்கும் உள்ள ஆராய்ச்சி சாலைகளில் சோதிக்கப்பட்டுள்ள எம்எஃப்பி ஃப்ளோரைட் துவாரங்களுக்கும், சிதைவுக்கும் எதிராகப் பற்களை உறுதிப்படுத்துகிறது என்பது மருத்துவ ரீதியாக நிரூபணமாகியுள்ளது. கோல்கேட்டின் நீண்ட ஆராய்ச்சி மட்டுமே இந்த தனிப்பட்ட எம்எஃப்பி ஃபார்முலாவை உங்களுக்கு வழங்க முடியும்.

**ஃப்ளோரிகார்டில் உள்ள எம்எஃப்பி ஃப்ளோரைட் எனுமலுடன் இணைந்து துவாரங்களுக்கும், சிதைவுக்கும் எதிராக உங்கள் பற்களை உறுதிப்படுத்துகிறது.**

இப்பொழுது தமிழ்நாடு மற்றும் கேரளாவில் மட்டுமே கிடைக்கும்.

CFT-G-2 TH

# பம்பரமும் வளையல்களும்...

ருக்மிணி பார்த்தசாரதி

அவள் தன் சிறு நகைப் பெட்டியைத் திறந்தாள். பூவேலைப்பாடு அமைந்த வெள்ளிக் கொலுசுகள் கண்ணைச் சிமிட்டின. அவற்றை எடுத்து முதலில் உள்ளங்கையில் ஏந்தி அழகு பார்த்தாள். பின், தன் பாதங்களில் பூட்டிக் கொண்டு அளவு கடந்த பிரேமையோடு அவற்றை வருடிவிட்டாள். எழுந்து, மெள்ள, அடி மேல் அடி வைத்து, தன் பாதங்களுக்கு அவை எத்தனை பொருத்தமாயிருக்கின்றன என்று பூரிப்பவள் போல், தனக்குத் தானே சிரித்துக் கொண்டாள்.

அவன் பார்த்துக் கொண்டே இருந்தான்.

அவன் தன்னைப் பார்ப்பதை அவள் அறியவில்லை. அறிந்திருந்தால் அவள் முகம் இறுகியிருக்கும். கடுகடுப்பும் சிடுசிடுப்புமாக அது உறைந்து போயிருக்கும்.

எத்தனையோ தடவை நினைத்தது போல் அவன் மறுபடியும் நினைத்தான் — அவளை மணந்து கொண்டது தவறு. அந்தப் பேரழகிக்கு அவன் ஏற்றவனில்லை. தன் இதயத்தையே அவள் பாதங்களில் சமர்ப்பித்திருக்கிறான் அவன். ஆனால் அவள் கண்களில் அன்பின் பிரதிபலிப்பையோ, பாசத்தின் கனிவையோ அவன் கண்டதேயில்லை. வாய்விட்டு அவள் குறைப்பட்டுக் கொண்டதில்லை என்பதென்னவோ உண்மைதான். ஆனால் முறுவலற்ற அவள் முகத்தை விட ஸ்பஷ்டமான பாஷை இருக்க முடியுமா? அந்தக் குறையை அவள் செய்கைகள் எல்லாமே பிரதிபலித்தன — சுவாரஸ்யமின்றி, ஒரே மாதிரியாக அவள் செய்து படைத்த உணவில், அவன் துணிகளைத் தோய்க்கும் போது அவள் முகத்தில் தெரிந்த அலுப்பில், அவன் அன்போடு வாங்கி வரும் பரிசுகளை அவள் பெரிய மனத்தோடு பெற்றுக்கொள்ளும் கர்வத்தில்....

இரண்டு காட்சிகள்தாம் அவன் முகத்துக்குப் புன்னகையை அளிக்கும் வல்லமை பெற்றிருந்தன. ஒன்று, கண்ணாடியில் தெரியும் அவள் பிரதிபிம்பம், மற்றொன்று அவர்களுடைய இரண்டு வயது மகன்.

'நல்ல வேளை, குழந்தை தாயைப் போல் அழகாக இருக்கிறான்!' என்று அவன் ஆறுதலடைந்தான். அவளுடைய அழகையும் அவனுடைய விகாரத்தையும் இணைக்கும் பாலமல்லவா குழந்தை! ''எங்களுக்கு இன்னொரு குழந்தை பிறந்தால்? அது என்னைப் போல் அழகற்றுப் பிறந்து விட்டால்?''— கற்பனையே கசந்தது.

அவன் உடலைச் சிலிர்த்துக் கொண்டு எழுந்தான். இந்த மாதிரி எண்ணங்களுக்கு நிஜத்தில் எந்த விதமான அர்த்தமும் இல்லை.



அவன் வேலைக்குப் புறப்பட்டபோது காலை மணி ஏழு. முதலில் டாக்ஸியை எடுக்க வேண்டும். பின் அதை 'செக் அப்' செய்து விட்டுப் பெட்ரோல் நிறைத்துக் கொண்டு ''கால்கா''விலுள்ள டாக்ஸி ஸ்டாண்டுக்குச் சென்று காத்திருக்க வேண்டும். சிம்லாவரை சென்று வர ஏதாவது சவாரி கிடைக்கும் வரை காத்திருக்க வேண்டும்.

மலை ரோடுகளில் வண்டி ஓட்டுவது கடினமான காரியம்தான். ஆனால் கால்கா—சிம்லா ரோடின் ஒவ்வொரு வளைவும், திருப்பமும், ஏற்றமும், இறக்கமும் அவனுக்கு மனப்பாடம். அந்த ரோடே நெருக்கமானது. ஆப்த நண்பனின் முகம் போல்...

டாக்ஸி ஸ்டாண்டுக்குச் சென்றவுடனேயே இன்று அவனுக்குச் சவாரி கிடைத்துவிட்டது. சிம்லா வரை சென்று யாரையோ பார்த்து விட்டு மாலையே திரும்ப விரும்பினார் ஒருவர். அவன் பூரித்துப் போனான். 'இன்று என் அதிர்ஷ்ட நாள். ஒரு நாள் முழுவதற்கும் டாக்ஸியை 'புக்' செய்துவிட்டார். நல்ல வருமானம் கிடைக்கும். இதில் அவளுக்குப் பளிச்சென்று ஒரு துப்பட்டா வாங்க வேண்டும். அதைக் காணும்போதாவது அவள் மனம் கனிந்து என்னைப் பார்த்து இனிமையாக முறுவலிக்க மாட்டாளா!' என்று அவன் ஏக்கத்தோடு நினைத்துக் கொண்டான்.

'சவாரி ஏறிக்கொண்டதும் அவன் டிரைவர் ஆசனத்தில் அமர்ந்தான். குனிந்து ஸ்டீயரிங் வீலில் நெற்றி பட வணங்கிவிட்டு, வண்டியைக் கிளப்பினான். டாக்ஸியை மெத்தென்று ஓட்டினான். கால்காவுக்குப் பிறகு நல்ல ஏற்றம். இரு புறங்களிலும் கல்லும் மண்ணுமாக நிர்வாணக் கோலத்தில் மலைகள். அழகுக்கும் அவற்றுக்கும் சம்பந்தமே இல்லை. ஒரு மரமோ, பசுமையான செடியோ மருந்துக்குக் கூட இல்லை. அவன் அந்த ஏற்றத்தில் வண்டியை லாகவமாகச் செலுத்தினான். பதினைந்தே நிமிடங்



களில் ஆயிரம் அடி ஏறிவிட்டது வண்டி.

''குளிரே இல்லையே!'' என்றார், வண்டியில் அமர்ந்திருந்தவர்.

''போகப் போகக் குளிரும் சார்! கவலைப்படாதீர்கள்!'' என்றான் அவன் முறுவலோடு.

''அதோ கீழே சலசலக்கிறதே, அதென்ன நதி?''

''கக்கர் (gaggar) நதி, சார்... சீக்கிரமே நாம் தரம்பூர் — தக்ஷாய் வந்துவிடுவோம்!''

''சரி...'' — அவர் நிச்சிந்தையாகக் கண்களை மூடிக் கொண்டார். ஐந்தே நிமிடங்களில் உறங்கியும் போனார்.

'எப்படிச் சின்னக் குழந்தை மாதிரி தூங்குகிறார் இவர்! வீட்டில் அன்பே உருவான மனைவி இருக்க வேண்டும். அந்தப் பாக்கியத்துக்கு நிகரானது இருக்கவே முடியாது!' தான் மணந்து கொண்ட பேரழகியை நினைத்துக் கொண்டான் அவன். சட்டென்று மனம் சோர்ந்து போயிற்று. தனக்கு அவள் மேலுள்ள அன்பின் ஆழத்தை அவன் எப்படி எடுத்துச் சொல்வான்? அவனிடம் அழகில்லை. பணமில்லை. ஆனால் அன்பிருக்கிறதே! இது பொக்கிஷமல்லவா? அதுவன்றி உழைத்துச் சம்பாதிப்பதெல்லாம் அவள் உடல் நலுங்காமல் அரசி போல் இருக்க வேண்டும் என்பதற்காகத்தானே?

''அவள் என்னை மணந்ததற்குப் பதில் நல்ல பணக்காரன் ஒருவனை மணந்திருந்தால் சந்தோஷமாக இருந்திருப்பாளோ?'' என்று அவன் கசப்போடு நினைத்துக்கொண்டான்.

சட்டென்று உறக்கம் கலைந்தவராக வண்டியில் இருந்தவர், 'ஹேய்! வண்டி ஏறாமல் இறங்கிக் கொண்டிருக்கிறதே, பாதை தவறி வந்துவிட்டாயா?'' என்று கலவரத்தோடு கேட்டார்.

''இல்லே சார்.... நாம் 'ஸோலன்' என்ற இடத்தை நெருங்கிக் கொண்டிருக்கிறோம். அதற்குப் பிறகு மறுபடியும் ஏற்றம்தான்.''

இப்போது அவன் வண்டியை நிதானமாக, உஷாராக ஓட்டினான். சாலை சில இடங்களில் கரடு முரடாக இருந்தது. டாக்ஸியை எத்தனை நிதானமாகச் செலுத்தினாலும் உடல் குலுங்கிக் குலுங்கி அதிர்ந்தது. பிரயாணியோ ஸீட்டை இறுகப் பிடித்துக் கொண்டு ''மெள்ள! மெள்ள!'' என்று முனகியவாறிருந்தார். அவனுள் மறுபடியும் சோர்வு படர்ந்தது. ஆண்டவனின் சிருஷ்டியில் மனித மனம் மட்டும்தான் விகாரமானது. எதைக் கண்டாலும் தனது சுயநலத்துக்காகச் சிதைத்துச் சின்னாபின்னமாக்குகிறான் மனிதன். இயற்கையில் கோடூரம் இருந்தாலும், சுயநலமும் வெறுப்பும் இல்லை. இயற்கை அளிப்பது ஆதரவை, நிம்மதியை, மனச் சாந்தியை... வாழ்க்கை ஓர் ஏமாற்று வித்தை. இயற்கையோ உயிர்த் தோழன்.



''நைட் வாட்ச்மேனா வர்றதுக்கு உனக்கு என்ன தகுதி இருக்கு?''
''லேசா சத்தம் கேட்டாலும் முழுச்சிக்குவேன் சார்!''
-Best Boss and Workers Jokes நூலிலிருந்து
வ. தேனப்பன்

ஸோலன் வந்துவிட்டது. அவன் டாக்ஸியை நிறுத்திவிட்டு இறங்கினான். ''சார்.. நான் இதோ டீ குடித்துவிட்டு வந்து விடுகிறேன்!'' என்றான்.

''எனக்கும் ஒரு கப் வேண்டும்!'' பிரயாணியும் புன்னகையோடு இறங்கிக்கொண்டார்.

அவன் தேநீரை ஊதிஊதிக் குடித்தவாறே சுற்றியிருந்த சிறு கடைகள் மீது பார்வையை ஓடவிட்டான். பொம்மைகள், ரிப்பன், வளையல்கள், மாலைகள், பிளாஸ்டிக் சாமான், அலுமினியப் பாத்திரங்கள்....

பொம்மைக் கடையிலிருந்து அவன் ஒரு பம்பரம் வாங்கினான். சிவப்பும் பச்சையும் நீலமுமாக வண்ணங்கள் தீட்டப்பட்டு அழகாக இருந்தது. 'இது சுழலும்போது குழந்தை என்னமாய்ச் சிரிப்பான்!' என்று எண்ணியபோது இதயம் இனித்தது. வளையல் கடையிலிருந்து இரண்டு டஜன் கண்ணாடி வளையல்களையும் வாங்கிக் கொண்டான். பம்பரத்திலிருந்த அதே வண்ணங்கள்! பரிசுப் பொருள்கள் இரண்டையும் டாக்ஸியின் 'டாஷ் போர்ட் பெட்டியில்' வைத்தான்.

பிரயாணம் தொடர்ந்தது. 'தாரா தேவி'யைக் கடந்தபோது சில்லென்று காற்று உடலைத் தாக்கி இன்ப அதிர்ச்சியைத் தந்தது. இப்போது, சாலையின் இரு மருங்கிலும் அடர்த்தியான பைன் காடுகள். பைன் மரங்களின் சுகந்தம் நாசியில் கம்மென்று இறங்கிற்று. கம்பீரமான காட்டரசன் இரு கைகளையும் நீட்டி வரவேற்பது போல் ஸிம்லா அவர்களை எதிர்கொண்டு அழைத்தது.

மறுபடியும் அவன் கால்காவை அடைந்தபோது மாலை மணி ஆறுக்கு மேல் ஆகிவிட்டது. பிரயாணி டாக்சிக் கட்டணத்தைத் தவிர கணிசமாக அவன் கையில் இனாம் வைத்திருந்தார். இதயமெல்லாம் இன்பம் படர அவன் நேரே கடைத் தெருவுக்குச் சென்று நல்லதாக ஒரு துப்பட்டா வாங்கிக் கொண்டான். பின், டாக்ஸியைச் சேர்த்துவிட்டுக் குதூகலத்தோடு வீடு நோக்கி நடந்தான்.

ஆனால், இதயத்தின் இன்னிசையில் அபஸ்வரம் பாய்ந்தாற்போல் அழுகுரல்கள் தெரு முனையிலேயே கேட்டன. அவன் கலவரத்தோடு பார்த்தான். சிறு கூட்டம் அவன் வீட்டுக்கு எதிரேதான்.

கூட்டத்தை நீக்கிக் கொண்டு அவன் உள்ளே சென்றபோது அவன் கண்கள் கண்ட காட்சி அவனை உறைந்து போக வைத்தது. ரத்தக் கறை படிந்த வெள்ளைத் துணியால் ஒரு சின்னஞ் சிறு உருவம் போர்த்தப்பட்டிருந்தது. அதனருகே அவன் மனைவி முகத்திலும் வயிற்றிலும் அடித்துக்கொண்டு உடல் குலுங்க அழுது கொண்டிருந்தாள்

கூட்டத்தில் யாரோ அவனிடம் விஷயத்தைச் சொன்னார்கள். அவன் மகன் தெருவில் விளையாடிக் கொண்டிருந்தபோது ஏதோ ஒரு கார் அவன் மேல் ஏறிவிட்டு, நிற்காமல் பறந்து விட்டது. உடனே ஆஸ்பத்திரிக்கு எடுத்துச் செல்ல வாகனம் கிடைக்கவில்லை. ஏதோ ஒரு நல்ல மனிதர் தம் காரில் ஆஸ்பத்திரிக்கு எடுத்துச்செல்ல முன்வருமுன் அச்சிறு உடலிலிருந்து உயிர் பிரிந்துவிட்டது.

அவன் அவள் அருகே சென்று அவள் தோள்களை ஆதரவோடு பற்றிக் கொண்டான். சர்ப்பம் தீண்டினாற்போல் அவன் கைகளை உதறினாள் அவள்.

''வந்துவிட்டாயா? உன்னை யார் அழைத்தார்கள்? குழந்தை உயிருக்காக மன்றாடிய போது நீ எங்கே இருந்தாய்? ஆனந்தமாகச் சவாரி ஏற்றிக் கொண்டு திரிந்தாயல்லவா? நீ அப்போது இங்கே இருந்திருந்தால் குழந்தை செத்திருக்க மாட்டான்! பணம்! பணம்! பணம் வந்தால் போதும் உனக்கு! பெண்டாட்டி பிள்ளையைக் கவனிக்க உனக்கேது நேரம்? ஐயோ அம்மா! நான் என்ன செய்வேன்? என் பிள்ளை இல்லாமல் நான் எப்படி இருப்பேன்?'' அவள் தலையை மோதிக் கொண்டு சத்தமிட்டு அழுதாள். பெண்கள் கூட்டம் அவளைச் சூழ்ந்து கொண்டது.

அவன் தனியே அநாதையாக நின்றான்.

மறுநாள் காலை அவன் தன் மைந்தனைப் புதைத்தான். அவளை அவள் பெற்றோர் அழைத்துச் சென்று விட்டார்கள். அவனுடைய மனப் புண் ஆற வேண்டாமா?

அவன் மனப் புண்? அது ஆறுவது எப்படி?

**கா**ல்கா — ஸிம்லா ரோடில் அவன் மறுநாள் வண்டியைச் செலுத்தினான்.

இது பரிச்சயமான வழி. ஆப்த நண்பனின் முகத்தைப் போன்றது.

அவனுக்கு ஆறுதல் வேண்டும். இதமான வார்த்தைகள் இல்லாவிட்டாலும், மௌன பாஷையிலாவது ஆறுதல் வேண்டும்.

'அவன் சாக வேண்டும் என்பது அவன் தலை விதி. நீ அருகில் இருந்திருந்தாலும் அவன் செத்திருப்பான். அவன் மரணத்துக்கு நீ பொறுப்பாளி இல்லை' என்று யாராவது அவனிடம் சொன்னால்! தெய்வமே! அந்த ஆறுதல் போதுமே!

தரம்பூர் — தக்ஷாய் நெருங்க நெருங்க இயற்கையின் அழகு கூடிற்று. காற்றில் குளுமை... தகிக்கும் அவன் உடலைச் சற்றே வருடினாற் போலிருந்தது.

ஸோலன் வந்தபோது அவன் சட்டென்று வண்டியை நிறுத்தினான். 'என்ன விந்தை! டாஷ் போர்ட் பெட்டியில் நேற்று நான் வைத்திருந்த பரிசுப் பொருள்களை மறந்தே போய்விட்டேனே!' பொட்டலத்தைப் பிரித்துப் பம்பரத்தையும் வளையல்களையும் எடுத்தான். உதட்டில் முறுவல் தோன்றி அழுகையாய்க் கோணிற்று. குனிந்து அவற்றை முத்தமிட்டபோது கண்களில் நீர் மறைத்தது. இதயத்தின் வலி மரத்துப் போகும்வரை அவன் அழுதான்.

மறுபடியும் டாக்ஸியைச் செலுத்தினான். மெள்ள மெள்ள இயற்கையின் நிகரற்ற அழகு அவனை ஆட்கொண்டது.



தயாரிப்பாளர்: '' 'ரேட்' இப்படி கேட்கறீங்களேம்மா.. ''
நடிகை: ''பின்னே எப்படி கேட்கிறது?''
தயாரிப்பாளர்: '' 'மாடரேட்டா' கேளுங்க!''
-கிணத்துக்கடவு ரவி

---

மறுபடியும் தன் மகனை நினைத்துக் கொண்டான். இந்த அழகிய சூழ்நிலையில் உறங்குகிறான் அந்தப் பாலகன். அவனுக்கா வலி? நோவு? இயற்கையின் மடியில் இன்பத்தைத் தவிர வேறெதுவும் கிடையாதே!

'தாராதேவி' வந்தபோது பைன் மரங்களின் சுகந்தம் அவன் உடலெங்கும் பாய்ந்தது. சட்டென்று அவனுள் ஏதோ ஒரு சாந்தம்; நிம்மதி... விரோதிகளை விட்டுவிட்டு நண்பர்களுக்கு நடுவே புகுந்துவிட்டது போன்ற உணர்வு...

டாக்ஸியை ஓரமாக நிறுத்தினான். பம்பரத்தையும் வளையல்களையும் மறுபடியும் எடுத்தான். அவற்றைத் தன் உள்ளங்கைகளில் ஏந்தி, கதிரவனின் ஒளியை அவை பளீரென்று பிரதிபலிக்கும் அழகைக் கண்டு வியந்தான். பின், ஸீட்டின் மேல் பம்பரத்தை நடுவே வைத்து, அதைச் சுற்றி வளையல்களை வட்டமாக வைத்து அழகு பார்த்தான். ''எத்தனை இனிமையானவர்கள் நீங்கள் இருவரும்!''? என்று வாய்விட்டுக் கிசுகிசுத்தான்.

டாக்ஸிக் கதவைத் திறந்து கொண்டு அவன் நிதானமாக வெளியே வந்தான். ஜில்லென்ற காற்றை ஆழ்ந்து சுவாசித்தான். தன்னைச் சுற்றியிருந்த மரங்களையும் இலைகளையும், மஞ்சளும், சிவப்புமாகக் குப்பென்று பூத்திருந்த காட்டுப் புஷ்பங்களையும் உள்ளம் குளிரப் பார்த்தான். குனிந்து பார்த்தபோது தலை சுற்றியது. பாதாளத்தில் ஏதோவொரு நதி, சிறுவனொருவன் காகிதத்தில் கிறுக்கிய கறுப்புக் கோடு போல் தெரிந்தது.

'என் மகன் கூட காகிதத்தில் பென்ஸிலால் கிறுக்குவானே!' என்று பெருமையோடு நினைத்துக் கொண்டான்.

பாதாளத்தில் அந்தக் கறுப்புக் கோடு நதிக் கரையில், மண் குடிசைகளும் சோள வயல்களுமாக ஒரு கிராமம் உறங்கியது.

தான் தேடின மௌன பாஷை ஆறுதலை அந்தக் காட்சியில் அவன் கண்டான்.

**ம**றுநாள் டிரைவர் இல்லாமல் அநாதை போல் நின்றிருந்த அந்த டாக்ஸியை யாரோ பார்த்தார்கள். கதவைத் திறந்தபோது புத்தம் புதிய பம்பரமும் கண்ணாடி வளையல்களும் பிரகாசித்தன.

## அத்தியாயம் 52

# மூன்றாவது சக்தி

படகோட்டி கூட யாரும் இல்லாமல் தானே படகின் துடுப்புக்களைத் துழாவித் தன்னந்தனியாகப் பாண்டவகட்டின் கரையை அடைந்த அந்த மனிதன் ராக்ஷஸர்கள் உலகத்திலிருந்து கலியுகத்திலும் மறையவில்லையென்பதை ருசுப்படுத்தவே வந்தவன் போல் தோற்றமளித்தான். ஆறடிக்கும் அதிகமான உயரத்துடன் மூன்றரை அடிக்குக் குறையாத சுற்றளவுடன் பிரும்மாண்டமாக அசல் மாமிசப் பிண்டமாகக் காட்சியளித்தாலும் அவன் தரையில் குதித்த வேகத்திலிருந்தும், நின்று நாற்புறமும் உடலைத் திருப்பி, வளைத்துப் பார்த்த நிலையிலிருந்தும் அவன் மாமிசம் வெறும் ஊளைச் சதையல்லவென்பதும் நன்றாகக் கெட்டிப்பட்ட, இரும்பையொத்ததென்பதும் சந்தேகமறத் தெரிந்தது. அப்படி நாற்புறமும் பார்த்த அவன் கண்களில், காதில் புகுந்த சங்கீதத்தின் விளைவாகச் சிறிது வெறுப்பும் தெரிந்தது. அவன் முகத்தில் வளர்ந்து முகவாய்க் கட்டையில் அடர்த்தி பெற்ற தாடி நறுக்கென்று கத்தரித்து விடப்பட்டிருந்தாலும் அதை அவன் ஒரு கையால் தடவியபோது அவன் மூளையில் முக்கால்வாசிப் பாகம் தாடியில் புதைந்திருக்க வேண்டும் என்ற முடிவுக்கு இடம் கொடுத்தது. அவன் தாடியை இடது கையால் தடவிக் கொண்டபோது சிந்தனை வசப்பட்ட கண்களும், இடையிலிருந்த இரு பெரும் கைத்துப்பாக்கிகளையும் நடுவிலிருந்த குத்து வாளையும் அவன் வலது கையால் தடவிக் கொண்டபோதும் அவன் உதடுகள் அசைந்த விதத்திலிருந்தும், அவன் உள்ளத்தில் கொலை உணர்ச்சி பரவிக் கிடந்ததென்பது சந்தேக மறப் புலனாயிற்று.

இப்படிச் சில விநாடிகளே நின்றுவிட்டுச் சோலையை நோக்கி நடந்த அந்த மனிதன் அடிக்கடி முகத்தில் வெறுப்பைக் காட்டினான். ''இந்த இரவில் யார் இப்படிக் கத்துவது?'' என்றும் கேட்டுக் கொண்டான், தனக்குத் தானே சற்று இரைந்து. இத்தகைய உணர்ச்சிகளுடன் சோலைக்குள் புகுந்தவன் சோலையில் முன் பகுதியில் இளரியுடன் உட்கார்ந்திருந்த வில்வரைக் கண்டான் முதலில். ராணியின் சங்கீதம் அப்போது ராகப் பிரஸ்தாரத்திலிருந்து ஏதோ ஒரு பஜன் கீதத்தில் ஈடுபட்டு லயத்துடன் அசையத் தொடங்கவே, வில்வரும் அதற்கேற்ப அசையத் தொடங்கினான். அப்படி அவன் அசையத் தொடங்கியதை வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்த அந்தப் புது மனிதன் வில்வரைத் தனது கால் செருப்பால் உதைத்தான் ஒரு முறை. அந்த உதையையும் லட்சியம் செய்யாத வில்வர் அவன் காலைக் கையால் எடுத்து அப்புறம் தள்ளிவிட்டு மீண்டும் இசைக்கு அசையலானான். இதனால் வெகுண்ட அந்தப் பிரும்மாண்ட மனிதன் மறுபடியும் காலால் சற்றுப் பலமாக உதைத்தான் வில்வரை.

அப்பொழுதும் இரும்பாத வில்வர் தனது



வலது கையால் அவன் கணுக்காலைப் பிடித்து ஒரு திருகுத் திருகித் தள்ளிவிடவே அந்த மனிதன் தடாலென்று மணலில் விழுந்தான். விழுந்ததால் பெரிதும் வெகுண்டு எழுந்திருந்து கையிலிருந்த பிச்சுவாவை எடுத்து ஸில்வர் மீது வீச முயன்ற சமயத்திலும் ஸில்வர் எழுந்திருக்கவில்லை. அவனது வலது கை பின்னுக்கித் திரும்பியது. அதிலிருந்து ஒரு கைத்துப்பாக்கி மிகப் பயங்கரமாக விழித்தது அந்தப் பயங்கர மனிதனை நோக்கி. எதிர்பாராத விதமாக ஏற்பட்ட இந்தத் திருப்பத்தால் வியப்பும் எரிச்சலும் கலந்த சாயையை முகத்தில் படர விட்டுக்கொண்ட அந்த மனிதனை நோக்கியிருந்த ஸில்வரின் கைத்துப்பாக்கி அவனை அருகில் வருமாறும் உட்காருமாறும் சைகை செய்தது. அந்தச் சைகையில் இருந்த உறுதியைக் கண்ட அந்த மனிதன் வேறு வழியின்றி ஸில்வரின் பக்கத்தில் உட்கார்ந்தான். ''யூ மஸ்ட் பி ஸில்வர்'' என்றான் ஆங்கிலத்தில். அவன் பேசியதால் சற்றே சங்கீத ஈடுபாடு சிறிது குறையவே பக்கவாட்டில் திரும்பி அவனை நோக்கிய ஸில்வர் ''ஷ்யூர். ஐ ஆம் ஸில்வர் அண்ட் யூ மஸ்ட் பி ஔரங்கசீப் (நான் ஸில்வர்தான். நீ ஔரங்கசீப்பாக இருக்க வேண்டும்)'' என்றான்.

''ஔரங்கசீப் ஈஸ் டெட் லாங் அகோ (ஔரங்கசீப் இறந்து வெகு நாளாகிறது)'' என்றான் அந்த மனிதன்.

''ஐ டோண்ட் திங்க்ஸோ ஸின்ஸ் யூ ஆர் ஹியர் (நான் அப்படி நினைக்கவில்லை. நீ இங்கு வந்திருப்பதால்)'' என்ற ஸில்வர் ''நௌ கீப் கொய்ட் டில் தட் ம்யூஸிக் ஈஸ் ஓவர் (அந்தப் பாட்டு முடியும்வரை சும்மா இரு)'' என்றான் கண்டிப்பான குரலில்.

''ஐ டோண்ட் லைக் இஸ் நாய்ஸ் (இந்தச் சத்தம் எனக்குப் பிடிக்கவில்லை)'' என்றான் அந்த மனிதன்.

அவன் மேலும் பேசியிருப்பான். ஆனால் ஸில்வர் தனது விழிகளை ஒரு விநாடி திருப்பி கைத்துப்பாக்கியையும் அவன் வயிற்றில் அழுத்தி ''யூ ஸே அனதர் வேர்ட். ஐ வில் ஷூட் யூ லைக் எ டாக் (இன்னும் ஒரு வார்த்தை பேச நாயைச் சுடுவது போல் உன்னைச் சுட்டுவிடுவேன்)'' என்று கூறிவிட்டுக் கைத் துப்பாக்கியை மட்டும் அவன் வயிற்றிலேயே ஊன்றிக் கொண்டு சங்கீதம் வந்த



திசையை நோக்கித் திரும்பினான்; மீண்டும் அசையலானான்.

அப்படி அவன் அசைந்தபோதும் அவன் அழுத்திய கைத்துப்பாக்கி மட்டும் திடமாக இருக்கவே. வந்த மனிதன் வில்வரின் மூளை ஏக காலத்தில் பல இடங்களில் லயிக்க முடியும் என்பதையும், எத்தனை இடங்களில் லயித்தாலும் ஒவ்வொரு இடத்திலும் அதன் முழு உணர்ச்சி விலகாதென்பதையும் சந்தேக மறப் புரிந்து கொண்டான். சுமார் இரண்டு நாழிகைகள் கழித்து ராணியின் சங்கீதம் படிப்படியாக இறங்கத் தொடங்கியது. அழகான யுவதி ஒருத்தி படிகளில் மெல்ல மெல்ல இறங்கி வருவதைப் போல. இறங்கிய ஒவ்வொரு படியிலும் மென்மை இருந்தது, சுகபாவம் இருந்தது. இப்படி மெதுவாக இறங்கி இயற்கையின் கருதியுடன் கலந்து நின்றதும், இசையில் மயங்கியவர்கள் சுயநிலை அடையப் பல விநாடிகள் பிடிக்கத்தான் செய்தன.

முதலில் தூரத்தே மரத்தில் மறைந்த இருவர் எழுந்திருந்து தங்கள் கைகளில் துப்பாக்கிகளை ஏந்திக் கொண்டு ராணி இருந்த இடம் நோக்கி நடந்தார்கள் மெதுவாகவும் எச்சரிக்கையுடனும். வில்வரும் எழுந்திருந்தான் புதிதாக வந்திருந்தவனுடன். "ஹூ த டெவில் ஆர் யூ? (நீ யார்?)" என்று கேட்டான் கைத்துப்பாக்கியை அந்தப் பெரும் தொந்தியிலிருந்து அகற்றி.

அவன் ஆங்கிலத்தில் பதில் சொல்லவில்லை. நல்ல அழகான உருதுவில் பேசினான். "நான் ஸாத் வித்தியின் வலது கை" என்று.

"அப்படித்தான் இருக்க வேண்டும்" என்றான் வில்வரும் நல்ல உருதுவில்.

"நீ நன்றாக உருது பேசுகிறாய்" என்று குதூகலித்தான் புது மனிதன்.

"அது அழகான மொழி. எந்த அழகான மொழியும் எனக்குப் பிடிக்கும். அது கிடக்கட்டும். உன் பெயர் என்ன?" என்று விசாரித்தான் வில்வர்.

"வித்தி அஹமத்" என்றான் வந்தவன் பெருமையுடன். "இங்கு கடல் ராணி என்பது யார்?" என்றும் கேட்டான் அவன்.

"அஹமத்!" வில்வரின் குரலில் விஷமச் சாயை இருந்தது.

"ஏன்?"

"உனக்குச் சங்கீதம்...."

"பிடிக்காது."

---

"ஆர்டிஸ்ட் சார் ஏன் கவலையா உட்கார்ந்திருக்கீங்க?"

"இந்த மாடர்ன் ஆர்ட்டில கண்ணு சரியா அமையலே!"

"அட, அதைச் சரி செய்ய வேண்டியது தானே?"

"அதான் கண்ணை எங்கே வரைஞ்சேன்னு தேடிக்கிட்டு இருக்கேன்!" —எஸ். சந்திரசேகர்



---

"அப்படியானால் கடல் ராணியையும் பிடிக்காது."

"பிடிக்கும்."

"ஏன்?"

"அவளைப் பிடித்துப் போக வந்திருக்கிறேன்."

வில்வரின் கண்கள் அந்த மனிதனை வியப்புடன் நோக்கின. "அது அத்தனை சுலபமென்று நினைக்கிறாயா?" என்று வினவின அவன் உதடுகள். அவற்றில் ஒரு விபரீத ஒலி இருந்தது.

"மற்றவர்களுக்குச் சுலபமில்லை. எனக்கு சுலபம்."

"எப்படி?"

"நான் பழிவாங்க வந்திருக்கிறேன்."

"அவள் மீது உனக்கு ஏன் இத்தனைக் கோபம்?"

"நான்கு நாட்களுக்கு முன்பாக..." என்று அஹமத் சிறிது நிதானித்தான்.

"சொல். பயப்படாதே. நான் உனக்கு உதவுகிறேன் ராணியைப் பிடிக்க." என்றான் வில்வர்.

"நான்கு நாட்களுக்கு முன்பாக ஸாத் வித்தியின் கப்பல்களில் இரண்டை இவள் கொளுத்திவிட்டாள்" என்றான் அஹமத். அவன் குரலில் பயங்கரம் பெரிதும் ஒலித்தது.

வில்வரின் முகத்தில் சிந்தனை படர்ந்தது ஒரு விநாடி. "நிச்சயமாகவா?" என்றான்.

"நிச்சயமாக."

"ஏன் கொளுத்தினாள்? எந்த இடத்தில்?"

"இங்கிருந்து ஒரு காத தூரத்தில். அவற்றிலிருந்த இரண்டு லட்சம் பெறுமான மோஹராக்கள் சூறையாடப்பட்டன."

வில்வரின் விழிகள் நன்றாக மலர்ந்தன. "கப்பல்கள் கொளுத்தப்பட்டால் மோஹராக்களை எப்படிச் சூறையாட முடியும்?" என்று வினவினான்.

"முதலில் இரண்டு கப்பல்களும் வளைத்துக் கொள்ளப்பட்டன. பிறகு அவற்றின் பாய் மரங்கள் சுட்டுத் தள்ளப்பட்டன பீரங்கிகளால். அடுத்து அவற்றில் ராணியின் மாலுமிகள் ஏறினர். பலரை வெட்டினார்கள். அடித்தளத்திலிருந்த பணப் பெட்டிகளை எடுத்துச் சென்றார்கள்" என்று விளக்கிச் சொன்னான் அஹமத்.

வில்வர் கேட்டான் "அவர்களெல்லாம் மால்வானிகளா?" என்று.

"சிலர் மால்வானிகள் அல்லது கொங்கணிகளாயிருக்கலாம். மற்றவர் வெள்ளைக்காரர்கள்" என்றான் அஹமத்.

வில்வரின் முகத்தில் தீர்க்காலோசனை படர்ந்தது. அவன் விழிகளில் வியப்புத் தாண்டவமாடியது. "அஹமத்! உனக்கு உதவ நான் விரும்புகிறேன்" என்று கூறிவிட்டு, "உங்களை வளைத்த கப்பல்கள் எத்தனை?" என்று வினவினான்.

"நான்கு" என்றான் அஹமத்.

"உங்கள் கப்பல்களின் தலைவர் யார்?" என்று வில்வர் கேட்டான்.

"நான்தான்."

"நீ மட்டும் எப்படித் தப்பினாய்?"

"என் கப்பல் தீப்பற்றியதும் கடலில் குதித்து நீந்திக் கரை சேர்ந்தேன். எனது மாலுமிகள் சிலரும் தப்பினார்கள்."



''ஏது? நீங்க கூட நாய் வளக்கறீங்களே! எதுக்கு?''

''வரவர திருட்டுப் பயம் அதிகமாயிருக்கு. எவனாவது என் கப்பறையைத் திருடுவானோ என்ற பயம்...'' —சுதர்சன்

---

''உங்களைத் தாக்கியது கடல் ராணிதான் என்பது எப்படித் தெரியும்?'' என்று வில்வர் கேட்டான்.

அஹமத் சிறிதும் சிந்திக்காமல் ஆத்திரத்துடன் பதில் சொன்னான், ''எங்களைத் தாக்கிய கப்பல்களில் ஒன்று பெரிது. அதன் பக்கப் பலகையிலும், பெரிதாக விரிந்த பாய் ஒன்றிலும் 'கடல் ராணி' என்று எழுதியிருந்தது.''

வில்வரின் சந்தேகமெல்லாம் பறந்தது. ''அஹமத்! கடல் ராணியைப் போரின்போது நீ பார்த்தாயா?'' என்று வினவினான் நிதானமான குரலில்.

''இல்லை'' என்றான் அஹமத், வில்வரின் கேள்விக்குக் காரணம் புரியாமல். அத்துடன் விளக்கினான். ''போருக்கு ராணிதான் வர வேண்டுமென்பதில்லை.'' என்று!

''அவசியமில்லை'' என்பதை ஒப்புக் கொண்ட வில்வர், ''அந்தப் பெரிய கப்பலை நடத்தி வந்தத் தலைவனைப் பார்க்க முடிந்ததா உன்னால்?'' என்று கேட்டான்.

''அந்த அயோக்கியனை எப்படிப் பார்க்காமல் இருக்க முடியும்? எங்கள் கப்பல்கள் எரிந்தபோது அவன் கப்பலில் நடுப்பாய் மரத்தில் சாய்ந்து நின்று சிரித்துக்கொண்டிருந்தான். அவன் வயதை நிர்ணயிக்கமுடியவில்லை. வாலிபனைப் போலிருந்தான். மிக அழகாகவும் இருந்தான். பிரிட்டிஷ்காரர்களைப் போல், அதாவது உன்னைப் போல் குறுக்காக ஹாட் அணிந்திருந்தான். ஒரு கையிலிருந்த துப்பாக்கியைச் சதா காரணமின்றிச் சுழற்றிக் கொண்டிருந்தான்.''

''அவன் முகம் குழந்தை முகம் போல் இருந்திருக்க வேண்டும்'' என்றான் வில்வர்.

''உண்மை! உண்மை! எப்படித் தெரிந்தது உனக்கு?'' என்று அஹமத் கேட்டான்.

வில்வர் தனது கைத்துப்பாக்கியை இடையில் சொருகிக்கொண்டு அஹமத்தின் தோளில் கையைப் போட்டுக் கொண்டு ''அஹமத்! தட் மான் ஈஸ் த மோஸ்ட் டேன்ஜரஸ் பெலோ அலைவ் (அவன் இப்பொழுதுள்ளவர்களில் மிக அபாயகரமானவன்)'' என்று கூறிவிட்டு, ''வா! ராணியைச் சந்திப்போம்'' என்று உருதுவுக்குத் திரும்பினான்.

''அவனை நான் ஏன் சந்திக்க வேண்டும்?'' என்று அஹமத் கேட்டான்.

''அவனைத் தூக்கிப் போகத்தானே இங்கு வந்தாய்?''

''ஆம்.''

''சந்திக்காமல் எப்படித் தூக்கிப்போவது?''

''தூக்கிப்போக நேராகச் சந்திக்கலாமா?''

''சந்திக்கலாம் வா.''

''நீ சொல்வது புரியவில்லை.''

''புரியாதது ஏதுமில்லை. உங்கள் கப்பல்களைத் தாக்கியது ராணியின் கப்பல்கள் அல்ல''

''வேறு யார்?''

''பிறகு சொல்கிறேன், வா என்னுடன்'' என்ற வில்வர் அஹமதை அழைத்துக் கொண்டு ராணி இருந்த முந்திரி மரத்தை நோக்கிச் சென்றான்.

அங்கு ராணி உலகை மறந்து கண்களை மூடிக் கொண்டிருந்தான். சற்று எட்ட முதலில் தோப்பில் புகுந்த இருவர் கைத் துப்பாக்கிகளை அவன் மீது குறிவைத்து நின்றிருந்தார்கள்.

''அஹமத்! உன் வீரர்களைத் துப்பாக்கிகளைக் கீழே போடச் சொல்'' என்றான் வில்வர்.

அஹமத் சைகை காட்ட, அவ்விருவரும் துப்பாக்கிகளைக் கீழே போட்டார்கள். அந்தச் சமயத்தில் வில்வர் சற்று இரைந்து அழைத்தான். ''ராணி!'' என்று.

ராணி கண் விழித்தான். ''இவர் உன்னைக் காண வந்திருக்கிறார்'' என்றான் வில்வர் அஹமதைச் சுட்டிக் காட்டி.

ராணி காரணத்தைக் கேட்கவில்லை. கண்களை மட்டும் அஹமதை நோக்கி உயர்த்தினான்.

''இவர் உனக்குச் செய்தி கொண்டு வந்திருக்கிறார்'' என்றான் வில்வர்.

''என்ன செய்தி?'' என்று மெள்ளக் கேட்டான் ராணி.

''சிந்து துர்க்க நாடகத்தில் மூன்றாவது ஒரு மனிதன் நுழைந்திருக்கிறான்'' என்றான் வில்வர்.

''யாரது?'' என்று வினவினான் ராணி.

பதில் அஹமதிடமிருந்து வரவில்லை. ராணிக்குப் பின்னால் சாருவுடன் நின்றிருந்த அனந்திடமிருந்து வந்தது.

அந்தப் பதிலில் ஒலித்த பெயர் அஞ்சா நெஞ்சனை வித்தி அஹமதையும் நடுங்க வைத்தது. சோலைகளிலிருந்த மற்றவர்களும் அதைக் கேட்டு நடுங்கவே செய்தார்கள்.

''உனக்கெப்படித் தெரியும் அவன் கடலில் நடமாடுவது?'' என்று விசாரித்தான் வில்வர்.

அனந்த் ராணியை நோக்கி நடந்தான். அவன் மடியிலிருந்த முத்திரைக் கடிதத்தை எடுத்து நீட்டினான் வில்வரிடம். ''இதற்கு இனிமேல் அவசியமில்லை. முத்திரையை உடைத்துப் படித்துப் பார்'' என்றான்.

படித்தான் வில்வர். படித்து முடித்த அவன் முகத்தில் சுவாரஸ்யமில்லை. ''நாம் பெருத்த அபாயத்தில் இருக்கிறோம்.'' என்ற சொற்கள் அவன் இதழ்களிலிருந்து உதிர்ந்தன. ''இதைச் சமாளிப்பது எப்படி?'' என்றும் கேட்டான் அனந்தை நோக்கி.

''தந்திரத்துக்குப் பதில் தந்திரம்தான் வழி'' என்ற அனந்த் ''சிந்து துர்க்க நாடகத்தில் மூன்றாவது சக்தி பிரவேசிக்கிறது!'' என்றும் கூறி அதைப் பற்றி விளக்கவும் முற்பட்டான்.

(தொடரும்)



லிப்டன் டீ கம்பெனியின் சென்னை கிளை மானேஜர் திரு V. S. ராகவன் அவர்களின் குமாரத்தி சௌபாக்கியவதி ஹரிணிக்கும் திரு S. கிருஷ்ணஸ்வாமி அவர்களின் குமாரன் சிரஞ்சீவி சம்பத் (Institute of Gas Technology, Chicago) அவர்களுக்கும் சமீபத்தில் திருச்சானூரில் திருமணம் வெகு சிறப்பாக நடைபெற்றது. சென்னையில் நடந்த வரவேற்பிற்கு ஏராளமான நண்பர்களும் பிரமுகர்களும் வந்திருந்து மணமக்களை வாழ்த்தினர்.

வாழ்க மணமக்கள்



சென்னை தியாகராய நகர் சிவா விஷ்ணு கோயிலின் பிரதம அர்ச்சகர் பிரம்மஸ்ரீ N. ஸ்வாமிநாத சிவாசார்யார் அவர்களுக்கு சமீபத்தில் சஷ்டியப்த பூர்த்தி சாந்தி சுப முகூர்த்தம் தியாகராய நகர் ஸ்ரீ பத்ம விஹார் கல்யாண மண்டபத்தில் விமரிசையாக நடந்தேறியது. அது சமயம் பிரமுகர்களும் நண்பர்களும் வருகை தந்து விழாவை சிறப்பித்தனர்.

வாழ்க சிவாசார்யார் தம்பதிகள்



சென்னை அனகாபுத்தூர் அருகில் உள்ள பாலாஜி நகரைச் சேர்ந்த திரு A. தியாகராஜன் சகோதரர் சிரஞ்சீவி மூர்த்தி B. A. (Modi Thread Mills)க்கும் திரு A. S. கோதண்டராம அய்யர் அவர்களின் குமாரத்தி சௌபாக்கியவதி சுஜாதாவிற்கும் சமீபத்தில் சென்னை குரோம்பேட்டையில் திருமணம் வெகு சிறப்பாக நடைபெற்றது. மாலையில் நடந்த வரவேற்பில் குரோம்பேட்டை T. சந்திரா, B. ரஞ்சனி நங்கநல்லூர் S. விஜயலட்சுமி அவர்களின் வீணைக் கச்சேரி நடைபெற்றது.

வாழ்க மணமக்கள்

# பிலிம் ரோல் வாங்கித் தந்தால் நடிக்கலாம்!

மகாபலிபுரத்தில் 'ஸ்டுடியோ' இருப்பது தெரியுமா? ஒரே சமயத்தில் ஏ.வி.எம். ஸ்டுடியோவில் 12 ஷூட்டிங்குகள்தான் நடத்த முடியும். ஆனல் மகாபலிபுரத்தில் உள்ள 'ஸ்டுடியோ'வில் எங்கேயும் எப்பொழுதும் எவ்வளவு வேண்டுமானுலும் படப் பிடிப்புக்கள் நடத்தலாம். அந்தத் திறந்தவெளி ஸ்டுடியோவின் பெயர் தான் கோல்டன் பீச். 'மன்மத ராகங்கள்' படத்தின் படப் பிடிப்புக்காக கோல்டன் பீச்சுக்குச் சென்றபொழுது அப்படத்தின் படப் பிடிப்பு எங்கே என்று கண்டு பிடிப்பதற்கே சிறிது நேரமாயிற்று. காரணம் ஒரு பக்கத்தில் தெலுங்குப் படப்பிடிப்பு, மற்ருெருபுறத்தில் ஒரு மலையாளப் படப்பிடிப்பு. ஜெயபாரதி நடித்துக் கொண்டிருந்தார். வேருெரு புறத்தில் சுபாசினி, பிரதாப், மோகன் நடித்துக் கொண்டிருக்க, மகேந்திரன் இயக்கிக் கொண்டிருந்தார். படத்தின் பெயர் 'நெஞ்சத்தைக் கிள்ளாதே'. இவ்வளவுக்கும் நடுவில்தான் அமைதியாக ஆர்ப்பாட்டமில்லாமல் புதுமுகம் ஸ்ரீகீதா நடிகைகளோடு நடித்துக் கொண்டிருந்தாள்.

உள்ளே போகும்போதே வாடா, போடா என்று ஒருமையில் ஒரு குரல் பலமாகச்சத்தம் போட்டுக் கொண்டிருந்தது. தமிழ்ப் பட உலகிலேயே எல்லோரையும் ஒருமையில் அழைக்கும் தைரியம் பெற்ற (வயதுமிருப்பதால்) ஒரே மனிதர் ஒய். ஜி. பி.தான் என்பது எல்லோருக்கும் தெரியும். நான் உள்ளே நுழையவும், 'உங்கள் மருமகளின் தங்கையை ரஜனிகாந்த் திருமணம் செய்து கொள்ளப் போகிருராமே' என்று யாரோ கேள்வி கேட்கவும், நான் என் காதைக் கூர்மையாக்கிக் கொண்டேன். 'நானும் உங்களைப் போல் பத்திரிகையில் பார்த்துத்தான் தெரிந்து கொண்டேன்' என்று அழகாக நழுவினுர் ஒய். ஜி. பி. அனுபவசாலியாயிற்றே! அகப்படுவாரா என்ன?

''என் காதலி வரா வழிவிடுங்கோ'' என்ருர் திடீரென்று ஒய். ஜி. பி. குட்டி பத்மினியின் தாயார் ராதாபாய் முகத்தில் மேக்கப்புடன் உள்ளே நுழைந்தார். ''படத்தில் • என் காதலியாக நடிக்கிருர் இவர்.'' ''இல்லே, இல்லே மனைவி'' என்று மறுத்தார் ராதாபாய். ''காதலிக்கும் மனைவிக்கும் என்ன அவ்வளவு வித்தியாசம்'' என்று ஒய். ஜி. பி. கூற எல்லோருமே சிரித்து விட்டார்கள். இதற்குள் ஸ்ரீகீதா வணக்கம் சொல்லிக் கொண்டே உள்ளே நுழைய, ''கோல்டன் பீச் முழுக்க நீங்க நடிக்கிற படம்தான் போலிருக்கு'' என்று ஒருவர் கூறச் சுற்றியிருந்தவர்கள் எல்லோருமே பார்த்தார்கள். அங்கு ஷூட்டிங் நடந்துகொண்டிருந்த தெலுங்குப் படத்திலும் இவர் நடிக்கிருராம். நெஞ்சத்தைக் கிள்ளாதே படக் கதாநாயகியும் இவர் தானும்.

இப்படி ஒருவரை யொருவர் வாழ்த்திக் கொண்டிருக்க சுற்றிலும் நடக்கும் ஷூட்டிங்கை ஒரு சுற்றுச் சுற்றி வந்துவிடலாம் என்ற எண்ணத்தில் நான் மெல்லக் கிளம்பினேன்.

✖ மன்மத ராகங்கள் படத்தில் 'ராதா' என்ற குதிரை, 'பிரின்ஸ்' என்ற நாய்



தயாரிப்பாளர் கௌரிசங்கரின் சிகப்பு நிறக்கார். அதை ஓங்கி உதைக்க வேண்டும் கதாநாயகன் மோகன். இந்தக் காட்சியைப் படமாக்கிக் கொண்டிருந்தார் இயக்குனர் மகேந்திரன்.

நான் காட்சியைப் பார்த்துக் கொண்டிருக்கும்போது என்னைச் செல்லமாக யாரோ தட்டு வதை உணர்ந்து திரும்பிப் பார்த்தேன். அங்கே நின்றிருந்தவர் யாராக இருக்குமென்று நினைக்கிறீர்கள்? இயக்குனர் பாரதிராஜாதான்! 'இங்கே எப்படி நீங்கள்?' என்று நான் இழுக்கு முன்பே, 'லொகேஷன், டிஸ்கஷன்,' என்று தம் கையில் உள்ள ஒவ்வொரு விரலையும் மடக்க ஆரம்பித்தார்.

அவருடைய சொந்தப்படமான 'நிழல்கள்' இந்த மாதத்தின் கடைசியில் ஆரம்பமாகப் போகிறது. அந்தப் படப் பிடிப்பின் வேலைகளுக்காகத்தான் இங்கு வந்திருப்பதாகக் கூறினார். இதற்குள் இயக்குனர் மகேந்திரன் வேறு இடத்துக்குத் தம் படப் பிடிப்பை மாற்ற, நானும் மெல்ல ஜெயபாரதி நடிக்கும் மலையாளப் படப்பிடிப்பைக் காணச் சென்றேன். அங்கு புதிதாக ஒன்றுமில்லை. கணவனும், மனைவியும் எல்லார் எதிரிலும் ஓடிப் பிடித்து விளையாடிக் கொண்டிருந்தார்கள். ஆமாம், நடிகை ஜெயபாரதி தம் கணவர் சத்தாருடன் மரத்துக்கு மரம் ஓட அவரைத் தொடர்ந்து ஓடிக் கொண்டிருந்தது திரைக் காமிரா. திரும்பவும் நான் ''மன்மத ராகங்கள்'' படப் பிடிப்புக்கு வரும்பொழுது நடிகை ஸ்ரீகீதா தனக்குச் சமீபத்தில் ஏற்பட்ட ஒரு புதுமையான அனுபவத்தை (நமக்கு அது பழையதுதான்), விவரித்துக் கொண்டிருந்தார்; ''அவர் சொன்னார், இவர் சொன்னார் என்று சினிமா உலகில் புகழ் பெற்ற சிலரின் பெயரைக் கூறிக் கொண்டு படமெடுக்கிறேன் என்று வந்துவிடுகிறார்கள். அப்படிப்பட்ட ஒருவர் என்னிடமும் வராமல் இல்லை. வந்தார். வந்தவர் என்னிடம் கதையையும் சொன்னார். கதை எனக்குப் பிடித்திருந்ததால் நானும் சரி யென்று நடிக்க ஒப்புக்கொண்டேன். முதல் நாள் ஆரம்ப விழா பூஜைக்குச் சென்றேன். 3, 4 மாதங்களுக்குப் பிறகு ஒரு நாள் இரண்டு மூன்று பேரை அழைத்துக்கொண்டு வந்தார். வந்து, ''படம் எல்லாம் எடுக்கத்தான்போகிறோம். ஒரு சிறு பிரச்னை எழுந்துள்ளது. நீங்கள் எதுவுமே செய்ய வேண்டாம். ஒரு ஐந்து ரோல் பிலிம் வாங்கிக் கொடுங்கள்'' என்றார். எனக்கு வந்ததே கோபம். ''நான் பிலிம் வாங்கிக் கொடுத்து நீங்கள் என்ன டைரக்ட் செய்வது? நானே செய்துவிட்டுப் போகிறேன். அதற்கு நீங்கள் ஏன்?' என்றேன்.

''அவர்கள் ''இப்பொழுது வந்துள்ள பல புகழ்பெற்ற முகங்கள் இப்படித்தான் செய்து வருகிறார்கள். இதில் தவறு ஒன்றுமில்லை'' என்று வேறு கூற ஆரம்பித்தார்கள். எனக்கு வந்த கோபத்தில் 'வெளியே போ' என்று மட்டும்தான் சொல்லவில்லை!''

வண்டியில் சென்னை வரும்போது அந்தப் படத்தின் பொதுஜனத் தொடர்பாளர், ''மன்மத ராகங்கள் ஒரு தலைசிறந்த படம். அனுபவம் மிக்க இயக்குனர் சங்கர் டைரக்ட் செய்யும் படம். இந்தப் படத்தில் ஒரு பொமரேனியன் நாய், வீனஸ் சர்க்கஸிலிருந்து வாங்கப்பட்ட குதிரை ராதா, ஒரு நல்ல பாம்பு ஆகிய மூன்று பிராணிகளும் வேறு நடிக்கின்றன'' என்று விடாமல் கூறிக் கொண்டே வந்தார். ஈசாப் கதைகளைக் கேட்பது போலிருந்தது!

—சலன்

✖ கதாநாயகி ஸ்ரீகீதா நாய்களுடன்



✖ அருண் குமார், ஒய். ஜீ. பி. ராதா பாய்



on the spot



மனிதனுடைய நீதி உணர்வு ஜனநாயகத்தைச் சாத்திய மாக்குகிறது; ஆனால் மனிதனின் அநீதி இழைக்கும் போக்கு ஜனநாயகத்தை அவசியமாக்குகிறது.

— ரெய்னால்ட் நெய்பர்

# சட்ட மன்றத்தில் புது முகங்கள்

**எம். பிச்சை**

(அ. இ. அ. தி. மு. க.) அருப்புக்கோட்டை

**எஸ்.** எஸ். எல். சி. வரை படித்தவர். படித்துக்கொண்டிருந்த நாட்களிலேயே எம். ஜி. ஆரின் நடிப்பாலும் கருணாநிதியின் வசனத்தாலும் கவரப்பட்டு அரசியலில் புகுந்தார். எம். ஜி. ஆர். தி. மு. க.வை விட்டு வெளியேறி அண்ணா தி.மு.க. ஆரம்பித்த போது இவரும் சேர்ந்தார்.

அருப்புக் கோட்டைத் தொகுதியின் பொருளாளராகவும் பொதுக்குழு உறுப்பினராகவும் விளங்கினார்.

''இருதுமால் நதித் திட்டத்துக்கு 96 லட்ச ரூபாய் நிதி ஒதுக்கீடு செய்யப்பட்டிருந்த போதிலும் வேலை நடைபெறாமல் நின்று விட்டது. இத் திட்டத்தைத் தொடரப் பாடுபடுவேன். அதுபோல கம்பிக்குடி அணைக்கட்டு திட்டம், சென்னம்பட்டி கால்வாய் திட்டம் ஆகியவை நிறைவேற உழைப்பேன். எங்கள் தொகுதியில் எல்லோரும் விவசாயத்தை நம்பித்தான் இருக்கிறார்கள். வறட்சிக் காலத்தில் இவர்கள் வேறு மாவட்டங்களுக்குப் பிழைப்புத் தேடிச் செல்வதைத் தடுக்கச் சிறு தொழில்கள் தொடங்கவும் முயல்வேன் என்று கூறும் இவர், வாலி பால் ஆட்டத்தில் புலி!

**ஆர். டி. கோபாலன்**

(அ.இ.அ.தி.மு.க.) கம்பம் தொகுதி
மதுரை மாவட்டம்

**ந**ல்ல கட்டுமஸ்தான உடல். ஏதோ பயில்வானைத்தான் பார்க்கிறோம் என்றால் அது கோபாலனைத்தான். இரும்பாலான உடலில் உள்ளே மென்மையான மனம். ஏழாண்டு காலம் தனியார் பள்ளியில் உடற் பயிற்சியாளராக வேலை பார்த்த அனுபவம் இவருக்கு உண்டு. கூடைப் பந்து ஆட்டத்தில் இவர் ஒரு சாம்பியன். மத்திய பிரதேச மாநில கூடைப் பந்து விளையாட்டுக் குழு உறுப்பினர். அதோடு பல்கலைக் கழக விளையாட்டுக்காரர்.

''விவசாயிகள் பிரச்னை, குடிநீர்ப் பிரச்னைகள், கிராமங்களுக்குத் தெரு விளக்கு இவைதான் என் தொகுதி மக்களுக்கு முக்கிய பிரச்னையாகும். இணைப்புச் சாலைகள் ஆண்டு ஒன்றுக்கு இரண்டு பாலங்கள் வீதம் கட்டி முடித்துவிடலாம் என்ற திட்டம் என்னிடம் உள்ளது'' என்று சொல்லும் இவரின் முக்கிய விருப்பம் விவசாயம்தான்.

**எஸ். ரத்தினராஜ்**

(தி. மு. க.) குளச்சல் தொகுதி
(குமரி மாவட்டம்)

**சி**றந்த ஆங்கிலப் பேச்சாளர். குமரி விவேகானந்தா கல்லூரியில் ஆங்கிலப் பிரிவின் துணைப் பேராசிரியராய் இருந்தவர். எம். ஏ. அறிவியல் பட்டதாரியான இவர், குறிந்தங்கோடு பஞ்சாயத்து யூனியனின் தலைவராகவும் இருந்தவர். தவிர விசைப் படகுக்காரர்கள் தலைவராகவும் இருந்தவர்.

''அண்ணாவின் பேச்சு என்றால் எனக்கு உயிர். உயிரோட்டமுள்ள அவர் சொற்பொழிவை பசி, உறக்கம் இல்லாது கேட்பேன்.

''என் தொகுதியில் குறிப்பாக ரப்பரில் 80 சதவிகிதம் செறிவுத் தன்மை இங்குதான் உள்ளது.

''அதோடு மாேனசைட் தரமானது இங்குதான் உள்ளது. எனவே ரப்பர், டைட்டானியம் தொழிற்சாலைகளை நிறுவவேண்டும். குளச்சல் துறைமுகத்தை நல்ல முறையில் அமைத்தால், ஓரளவு வேலை வாய்ப்புப் பிரச்னையும் தீரும்; தொழிலும் பெருகும்.

வேலையில்லாத் திண்டாட்டம் போக்கவும் குளச்சல் துறைமுகத்தைக் கடலரிப்பிலிருந்து காக்கத் தடுப்புச் சுவர் போடுவதும் ஆகிய பிரச்னைகளுக்குத் தீர்வு காண்பதும்தான் என்


எம். பிச்சை


ஆர். டி. கோபாலன்


எஸ். ரத்தினராஜ்

லட்சியம்'' என்று கூறும் இவருக்குத் தனியாகச் சைக்கிள் ஓட்டுவது வெல்லக்கட்டி தின்பது மாதிரியாம்.

### க. தனுஷ்கோடி தேவர்

(அ.இ. பார்வர்டு பிளாக்) முதுகளத்தூர்
முகவை மாவட்டம்.

உழைப்பால் முன்னேறிய விவசாயக் குடும்பத்தைச் சேர்ந்த இவருக்கு நான்கு குழந்தைகள் உண்டு. எட்டாம் வகுப்பு வரை படித்திருந்தாலும், நல்ல உலக அறிவு பெற்றவர்.

''1959ம் ஆண்டு என் வாழ்வில் ஒரு திருப்பு முனையை ஏற்படுத்தியது. மதுரை தமுக்கம் கலையரங்கு சுற்றி ஒரே மக்கள் கூட்டம். திரு முத்துராமலிங்கத் தேவரும், ராஜாஜியும் ஒரே மேடையில் பேசினார்கள். அவர்களின் பேச்சில் உதித்த ஒவ்வொரு சொல்லும் என்னைப் புதிய பாதைக்கு அழைத்துச் சென்றன. இதில் ஏற்பட்டது தான் என் அரசியல் பிரவேசம்.

''தேவரிடம் நான் கண்டது அவரின் தன்னலமற்ற சேவை மனப்பான்மை, பிரம்மச்சரியம், எளிமை என்று சொல்ல வேண்டும். சொல்ல வேண்டிய பெரிய கருத்துக்களைக் கூட மிக எளிதில் புரியும்படி சொல்வார்'' என்று கூறும் இவர் பஞ்சாயத்துத் தலைவராக ஏழு ஆண்டுகள் இருந்தது மட்டுமல்லாமல், வாகைகுளத்தில் நடந்த விவசாயப் போராட்டத்தில் கலந்து கொண்டு சிறை சென்றவர்.

### பி. தீர்த்தராமன்

(கா.கா. தே. காங்கிரஸ்) பெண்ணாகரம்
தருமபுரி மாவட்டம்

மிகவும் வயதில் குறைந்தவரான இவர் விவசாயத்தின் மேல் உள்ள தீவிர ஆர்வத்தால் பி.யூ.ஸி.யோடு படிப்பை நிறுத்தி விட்டார்.

''என் இளம் வயதிலேயே காமராஜரைச் சந்திக்கும் பேறு பெற்றேன். காமராஜர் அவர்கள் 1973 அக்டோபர் மாதம் நடத்திய அறப் போராட்டத்தில் என் தலைமையில் 57 பேர்களுடன் சிறை சென்று சேலம்மத்திய சிறையில் ஐந்து நாள் தங்கினேன். நான் தலைமை ஏற்றுச் சென்ற அன்று, எங்கள் இயக்கத் தலைவர் குமரி அனந்தன் அவர்கள் கலந்துகொண்டு வாழ்த்திச் சிறைக்கு அனுப்பி வைத்தார். என், வாழ்க்கையில் மறக்க முடியாத இனிய பகுதி அவை.

''எங்கள் குடும்பம் காங்கிரஸ் பாரம்பரியத்தில் வந்த குடும்பம். நான் ஆசிரியராய் இருந்து பின்பு வேலையை ராஜினாமாச் செய்துவிட்டுக் கூட்டுறவு சங்கத் தலைவராகவும் பல ஆண்டுகள் இருந்ததன் பொருட்டுப் பல காங்கிரஸ் தலைவர்கள் தொடர்பு ஏற்பட்டது'' என்று கூறும் இவரின் லட்சியம் காவேரி நீர் மின் திட்டமாம்.

### எம். ஏ. ராஜகுமார்

(அ.இ.அ.தி.மு.க.) மருங்காபுரி தொகுதி
திருச்சி மாவட்டம்

வழக்கறிஞரான இவர் பேசும்போது தமிழ் விளையாடுகிறது. ஓய்வு நேரங்களில் சட்டம் மற்றும் வரலாறு சம்பந்தப்பட்ட நூல்கள் தான் இவர் நண்பன். இருப்பினும் தன் குடும்பத் தொழிலான விவசாயத்தை மறக்க வில்லை.

'' 'மருத நாட்டு இளவரசி' படம் பார்த்ததிலிருந்து தலைவர் அவர்களிடம் பாசம் ஏற்பட்டு அது முதல் அவர் நடித்த படங்களை மட்டும் பார்த்து வந்தேன். அவரது சீரிய கருத்துக்கள் என்னை ரொம்பக் கவர்ந்தன. அவர் தி. மு. க.வில் இருந்தபோது நானும் எங்கள் ஊர் தி. மு. க.வின் கிளைச் செயலாளராகவும் இருந்து பின்பு அவர் நீக்கப் பட்டபோது, அத்துன்பம் தாங்க முடியாமல் 1972ம் ஆண்டு கழகத்தின் என் பதவியை ராஜினமாச் செய்தேன். பின் அ.இ.அ.தி. மு. க.வில் சேர்ந்தேன். எந்தக் கட்சியிலும் உறுப்பினர் அல்லாத எனது சீனியர் வக்கீல் ஜி. எம். விருத்தாசல ரெட்டியார் அவர்கள் எனக்கு முன்மாதிரியாக இருந்து வக்கீல் தொழிலிலும், அரசியல் வாழ்க்கையிலும் என்னால் மறக்க முடியாதவர்.

என் தலைவர் புரட்சித் தலைவரை முதன் முதலாகச் சென்ற 1972ம் ஆண்டு செப்டம்பர் மாதத்தில் சந்தித்தபோது என் உற்சாகத்துக்கு எல்லையே இல்லை.

பேட்டி: சிக்கி

க. தனுஷ்கோடி தேவர்



பி. தீர்த்தராமன்



எம். ஏ. ராஜ்குமார்





கிளார்க்: ''சம்பள உயர்வு கேட்கணும்.... மானேஜர் நல்ல மூடில் இருக்காரா முனுசாமி?''

முனுசாமி: ''நல்ல மூடில்தான் இருக்காரு. நீ போய்ச் சம்பள உயர்வு அது இதுன்னு கேட்டு அதைக் கெடுத்துடாதே.... அப்புறம் தொட்டதுக் கெல்லாம் என்மீது எரிஞ்சு விழுவாரு!''



ஹெட் கிளார்க்: ''ஆபிஸ் விட்டதும் அப்படியே சினிமா போயிடலாம்னு இருக்கேன்... நீ என் வீட்டுக்கும் போய் என் மிஸஸிடம்....''

முனுசாமி: ''விஷயத்தைச் சொல்லிப் பெர்மிஷன் வாங்கிட்டு வரணுமா....? உன்னோடே இதே ரோதனையாப் போச்சு ஸார்.... வர்றபோதே பெர்மிஷன் கேட்டுக்கிட்டு வந்தா என்ன....?''



முனுசாமி: ''உங்களால் தினசரி எனக்குத் தலைவலிதான்!''

லேடி டைப்பிஸ்ட்: ''நான் என்ன செஞ்சேன் முனுசாமி....?''

முனுசாமி: ''நீங்க ஒண்ணும் செய்யலே.... நீங்க போட்டுக்கிட்டு வர்ற மட்டமான செண்ட்தான் தலைவலியைக் கிளப்புது!''



ஹெட் கிளார்க்: ''முனுசாமி! மு னு சா மி! முனுசாமி!''

முனுசாமி: ''ஒருதடவை கூப்பிடுவார் போதும்! உங்கப்பா கோர்ட்டுல் டவாலியா இருந்தது எல்லோருக்கும் தெரியணுமா....?''





மானேஜர்: ''எதிர் தோட்டத்துக்குப் போய் ஒரு கப் காப்பி வாங்கி வரும்படி பணிவுடனும் மிக்க அன்புடனும் கேட்டுக்கொள்கிறேன்!''

முனுசாமி: ''ஏதோ இல்லாத கொடுமையினால் என்னிடம் ஆயிரம் ரூபாய் கடன் வாங்கிட்டீங்க... அதுக்காக நீங்க இப்படியெல்லாம் பணிவாப் பேசணும்னு நான் எதிர்பார்க்கலே ஸார்... பயப்படாம எப்பவும்போல் அதிகாரமாகவே பேசுங்க ஸார்!''

மானேஜர்: ''ஆபீஸ் ஸோர்க்கர்களை மரியாதையில்லாம வா போன்னு பேசறியாமே...?''

முனுசாமி: ''எவன் சொன்னான் உன்னாண்டே?''

# பியூன் முனுசாமி

— உ. ராஜாஜி





மானேஜர்: ''லேட்டா வராதே லேட்டா வராதேன்னு எத்தனை தடவை சொல்லியிருக்கேன்..?''

முனுசாமி: ''நான் எண்ணிக்கிட்டே வரலே ஸார்... உத்தேசமா ஒரு ஆயிரவாட்டி சொல்லியிருப்பே!''

ஸோர்க்: ''அடிக்கடி மலையாளப் படம் போறியாமே... உனக்கு என்ன புரியுது அதிலே...?''

முனுசாமி: ''அல்லாமே புரியுது!''

**எந்தைஎன் குருவே என்உயிர்க்கு உயிரே
என்இரு கண்ணின்உள் மணியே
இந்துறும் அமுதே என்உயிர்த் துணையே
இணையிலா என்னுடை அன்பே
சொந்தநல் உறவே அம்பலத்து அரசே
சோதியே சோதியே விரைந்து
வந்துஅருள் என்றேன் வந்துஅருட் சோதி
வழங்கினை வாழிநின் மாண்பே!**

— திருஅருட்பா

சுநேகா இன்றைக்கு ஐந்து மணிக்கு காந்தி புரம் கார்னரில் எனக்காகக் காத்திருப்ப தாகச் சொன்னாளே?

இப்பவே மணி நாலரை ஆகிவிட்டது.

அவசர அவசரமாகக் குளித்தேன். உடை மாற்றிக் கொண்டேன். தலையைச் சீவிப் பவுடரை அப்பிக் கொண்டு வேக வேகமாக வெளியே கிளம்பினேன்.

காந்திபுரத்தில் ஒரு சாரீஸ் ஷோரூம் முன் னால் நின்று கொண்டிருந்தாள் சுநேகா.

என்னைப் பார்த்ததும் கை காட்டி ''கொஞ் சம் பொறுங்கள்'' என்று ஜாடையாகச் சொல்லிவிட்டுக் கடைக்குள் நுழைந்தாள்.

என்னை வெளியே நிற்கச் சொல்லிவிட்டு இவள் எதற்காகக் கடைக்குள் நுழைகிறாள்?

நான் கடைக்குள் நுழைந்தபோது சுநேகா லேசாக நாக்கைக் கடித்து முன்னால் கைநீட்டி ஜாடை காண்பித்தாள்.

பார்த்தேன்.

சுநேகாவின் அம்மா, அண்ணன், அண்ணி எல்லோரும் கடைக்காரர் விரித்துப் போட்ட சேலைத் துணிகளைப் பார்த்துக் கொண்டிருந் தார்கள்.

''சுநேகா.... வா....'' என்று கையசைத் தேன்.

''கொஞ்சம் பொறுங்கள்'' என்று பதி லுக்கு ஜாடை செய்தாள் சுநேகா.

கடை முதலாளி எங்கள் இருவரையும் சந்தேகத்தோடு பார்த்தார்.

அரை மணி நேரம் கழித்து இரண்டு மூன்று பார்சல்களுடன் அவளது குடும்பத்தினர் வெளியே வந்தார்கள்.

சுநேகாவுக்கு மட்டும் தெரியும்படி தலை நீட்டி ''வா!'' என்றேன்.

''பொறுங்கள்'' என்று ஜாடை செய்து விட்டு அவர்கள் பின்னால் நடந்தாள்.

''அம்மா....'' — சுநேகா மெதுவாக இழுத்தாள்.

''என்னடி?''

''பக்கத்துத் தெருவிலே என் சிநேகிதி ஒருத்தி இருக்கா. அவளைப் பார்த்துட்டு வர் றேம்மா...?''

''விளக்கு வைக்கிற நேரத்தில என்னடி சிநேகிதி வீட்டுக்கு விஜயம்?''

''அவள் கிட்டே ஒரு முக்கிய விஷயம் சொல்லணும்மா....''

''நாளைக்குச் சொல்லிக்கலாம். பேசாம வா.''

''அம்மா... சீக்கிரம் வந்திர்றேம்மா ...'' சுநேகா கெஞ்சினாள்.

''சரி.... புவனா நீயும் கூடப் போயிட்டு வா.''

காலில் தேள் கொட்டியதைப் போல் துள் ளிக் குதித்தாள் சுநேகா.

''அம்மா... அண்ணி எதுக் வந்து.... கும்மா... வீணா. நானே போயிட்டுச் சீக் கிரமே வந்துடறேன்...''

''சரி போகச் சொல்லும்மா'' என்று சுநேகாவின் அண்ணன் அவளுக்குப் பரிந்து கொண்டு சொன்னான்.

''சரி, போயிட்டு உடனே வந்துடு'' என் றாள் சுநேகாவின் அம்மா.

''தாங்க் யூ மம்மி'' கொன்னை மகிழ்ச்சி யோடு திரும்பி வந்தாள் சுநேகா.



கண்களால் என்னைத் துழாவினாள்.

"சுநேகா! ஏதாவது டிபன் சாப்பிடுவோமா?"

அவள் தலையாட்டினாள்.

கௌரி சங்கரில் 'ஃபேமிலி' அறைக்குள் நுழைந்தோம்.

சுநேகாவின் அழகான முகத்தை ஆசையோடு பார்த்துக் கொண்டிருந்தேன்.

அவள் முகத்தை 'உம்' மென்று வைத்துக் கொண்டிருந்தாள்.

சர்வரிடம் 'ஆர்டர்' கொடுத்துவிட்டு, "சுநேகா..! என்மேல் ஏதாவதுகோபமா" என்று கேட்டேன்.

என்னைப் பார்த்தாள். அவள் கண்களில் கோபம் தெரிந்தது.

"நீங்க உண்மையா என்னைக் காதலிக்கிறீங்களா?"

நான் ஒரு நிமிடம் அதிர்ந்தேன். "சுநேகா என்ன விளையாடறியா?" என்றேன் லேசான எரிச்சலுடன்.

"முதல்லே கேட்டிறதுக்குப் பதில்!"

"என் உயிரே நீதானே?"

"அப்பமன்னு எதுக்காகப் பெண் பார்க்கப் போனீங்க?"

நான் ஹோட்டலே அதிரும்படி சிரித்தேன்.

சுநேகா வெடுக்கென்று என் கைகளைக் கிள்ளினாள்.

"இதுக்குப் போயா முகத்தை 'உம்'ன்னு வெச்சுக்கிட்டுக் கோபமா இருக்கே? அம்மாவும் அப்பாவும் ரொம்பக் கட்டாயப்படுத்தினாங்க. பெண் ரொம்ப அழகு. நல்ல வசதியான இடம். முதல்லே பெண்ணை வந்து பாரு மத்ததை அப்புறம் பேசிக்கலாம் என்று வற்புறுத்தினாங்க. சரி. அவங்க ஆசையை ஏன் கெடுக்கணும்னு போனேன். தட்ஸ் ஆல்."

"ராஜேஷ்!.... நீங்கதான் என் வாழ்வு. என் இதயம் முழுவதும் உங்க நினைவுகளே வியாபிச்சு இருக்கு. அடுத்த பெண்கள் உங்களைப் பார்த்தாலே என் நெஞ்சு கொதிக்கிறது. நீங்க வேறே பெண்ணைக் கல்யாணம் செஞ்சுக்கிட்டா....நான்.... அடுத்த நிமிடமே...."

சுநேகாவின் உதடுகள் துடித்தன. விழிகளில் நீர் மிதந்தது.

"ச்சீ....அசடு! நீயே ஏன் ஏதேதோ கற்பனை பண்ணிக்கிறே? யாராவது பார்க்கப்போறாங்க முதல்லே கண்ணைத் துடை" — கர்ச்சிப்பை அவளிடம் நீட்டினேன். வாங்கித் துடைத்துக் கொண்டாள்.

டிஃபனை முடித்துக் கொண்டு சர்வர் கொடுத்த பில்லுக்குப் பணத்தைக் கொடுத்து விட்டு வெளியே வந்தோம்.

ஒரு குழந்தை சுநேகாவின் சேலையைப் பிடித்து இழுத்தது.

அவள் திரும்பிப் பார்த்தாள். அழகான குழந்தை. விழிகள் கவர்ச்சியாயிருந்தன. முல்லைஇதழ் சிரிப்பை உதிர்த்தது.



"நம்ம மேனேஜர் கிட்டே டிராமா டிக்கட்டை விற்கப் போனது தப்பாப் போச்சு!"

"ஏன்?"

"அஞ்சு ரூபா டிராமா டிக்கெட்டை என் கிட்டே வாங்கிட்டு அவர் நடத்தப் போற பஜனைக் கச்சேரிக்காக பத்து ரூபா என்னிடம் டொனேஷன் வாங்கிட்டார்!"

-கிரிஜா மணாளன்

சுநேகா ஆசையோடு குழந்தையை அள்ளி மாறி மாறி முத்தம் கொடுத்தாள்.

ஒரு பெண் எங்களை நெருங்கினாள்.

"ராஜா...அம்மா இங்கே இருக்கேன்..." என்று அந்தப் பெண் கையை நீட்டினாள்.

சுநேகா மனமில்லாமல் குழந்தையைக் கொடுத்து விட்டு என்னை ஏக்கத்தோடு பார்த்தாள்.

நான் வெளியே நடந்தேன். அவள் என்னைத் தொடர்ந்தாள்.

"ராஜேஷ்... அந்தக் குழந்தை எவ்வளவு அழகா இருக்கு.... இல்லே?"

"அதுக்கு என்ன இப்போ?"

"அந்தக் குழந்தையைப் போலவே எனக்கும் ஒரு குழந்தை...."

நான் துள்ளிக் குதித்தேன்.

"இப்படிப்பட்ட வார்த்தை உன் வாயாலேயே வராதான்னு எத்தனை நாள் தவம் கிடந்தேன் தெரியுமா? கம் ஆன். ஹோட்டல் ஹோனுலேலே ரூம் எடுக்கலாமா?" சுநேகாவின் கையைப் பற்றி இழுத்தேன் அவசரமாக.

அவள் வெடுக்கென்று கையை உதறினாள்.

"ச்சீ... மூஞ்சியைப் பாரு... நம்ம கல்யாணத்துக்குப் பிறகு உங்களைப் போலவே கொழு கொழுன்னு அழகா ஒரு குழந்தை வேணும்னு சொல்ல வந்தால்...."

"உன்னைக் காதலிச்சதுக்கு ஒரு கழுதையைக் காதலிச்சிருக்கலாம்...."

சுநேகா என்னைக் கோபமாகப் பார்த்தாள்.

"சரி....சரி.... நாளைக்காவது சீக்கிரமே வா... ஏதாவது படம் போகலாம்."

சுநேகா குறும்புச் சிரிப்புடன் தலையாட்டி விட்டுப் புறப்பட்டாள்.

"என்ன இது...? படம் பார்க்க விடுங்க!"

சுநேகா கையை விலக்கி விட்டாள்.

நான் சலிப்போடு படம் பார்க்க ஆரம்பித்தேன்.

சொத்துக்காக ஒரு பணக்காரனின் குழந்தையை வில்லன் கடத்திக் கொண்டு போகிறான். கதாநாயகன் அவனைத் துரத்திக் கொண்டு ஓடுகிறான். மலையின் உச்சியிலிருந்து வில்லன் கதாநாயகனுக்கு எச்சரிக்கை செய்கிறான். "என் கிட்டே வராதே. மரியாதையாத் திரும்பிப் போயிடு. இல்லேன்னு இந்தக் குழந்தையின் பிணத்தைத்தான் நீ தூக்கிக் கொண்டு போக வேண்டி வரும்." என்று ஒரு பளபளத்த கத்தியைக் குழந்தையின் கழுத்தில் வைக்கிறான்.

திடீரென்று ஒரு பெண்ணின் அலறல்.

சுநேகா மயக்கமாகி என்மீது சரிந்தாள்.

படம் நிறுத்தப்பட்டது. விளக்குகள் ஒளிர்ந்தன. "என்ன...? என்ன..... என்னாச்சு?" கூட்டம் கூடிவிட்டது..

''சுநேகா... சுநேகா! நான் பதற்றத்துடன் அவளை அசைத்தேன்.

சோடா குடித்ததும் விழிகளைத் திறந்து என்னைப் பார்த்தாள். தன்னைச் சுற்றியிருந்த கூட்டத்தைப் பீதியோடு பார்த்தாள்.

''ஒண்ணும் இல்லே... ஒண்ணுமில்லே... எல்லாரும் போங்க....'' எனக்கு அருகில் இருந்தவர் கூட்டத்தை விரட்டினார்.

''சுநேகா... வா.... வீட்டுக்குப் போகலாம்'' என்று ஸ்கூட்டரின் பின்னால் அவளை அமர்த்திக் கொண்டு புறப்பட்டேன்.

''சுநேகா... இது சாதாரணப் படம்தானே? அதற்குப் போய் இப்படியா?''

''இல்லே ராஜேஷ்... அவன் அந்த அழகான குழந்தையைக் கொன்னுடுவானேன்னு பயந்து போய்விட்டேன்!''

''சரி, அப்படித்தான் அவன் அந்தக்குழந்தையைக் கொல்லட்டுமே. நடிப்புத்தானே? ஒண்ணுமே இல்லாத விஷயத்துக்குப் போய் இப்படியா மனசைக் கஷ்டப்படுத்திக்குவாங்க? உனக்கு ஏதாவது ஆகி இருந்தா?''

''ராஜேஷ்... நான் இங்கேயே இறங்கிக்கிறேன்....''

''நான் வரட்டுமா? நல்லா ரெஸ்ட் எடுத்துக்கோ.''

மறுபடியும் சுநேகா அழகாகத் தலையசைத்தாள். நான் போக மனமில்லாமல் ஸ்கூட்டரை மிதித்தேன்.

திரும்பவும் நான் இரண்டு மணி நேரம் கழித்துக் கண் விழித்தேன்.

நர்ஸ் வந்து ஊசி போட்டுவிட்டுப்போனாள். அம்மா கண்ணீரோடு என்னைப் பார்த்தாள்.

''அம்மா! எதுக்காகம்மா அழறே? அந்த முருகன் என் கையையும் காலையும் சிதைக்காமல் விட்டானே... அதுக்காகச் சந்தோஷப்படு.''

நர்ஸ் திரும்பி வந்தாள்.

''சார்! உங்களைப் பார்க்க சுநேகான்னு ஒரு பெண் வந்திருக்கு.''

''ஸிஸ்டர்... அந்தப் பெண்ணை நான் பார்க்க விரும்பலேன்னு சொல்லுங்க.''

சிறிது நேரத்தில் நர்ஸைத்தள்ளிக்கொண்டு கதறியபடி என்னிடம் ஓடிவந்தாள் சுநேகா.

''ராஜேஷ்...! உங்களுக்கு என்னாச்சு... ராஜேஷ்!'' — கதறினாள்.

''எனக்கு என்ன ஆனால் உனக்கென்ன?''

விக்கித்துப் போனாள்.

''சுநேகா! நீ என்னை மறந்துடு. நான் உன்னைக் கல்யாணம் செய்துக்கப் போறதில்லே. அந்தப் பணக்கார வீட்டுப் பெண்ணைத்தான் கல்யாணம் செய்துக்கப் போறேன் என்னோட அம்மா அப்பா ஆசைதான் என் விருப்பம்.''

அதிர்ச்சியோடு என்னைப் பார்த்தாள் சுநேகா. ''ராஜேஷ்! உண்மையாகவா சொல்றீங்க?''

''சத்தியமாகச் சொல்கிறேன்.''

அவள் திடீரென்று கோபத்தோடு கத்தினாள். ''ராஜேஷ்! நீங்க ரொம்ப நல்லவர். பண்பானவர்னு நெனச்சு இருந்தேன். ஆனா பணத்துக்காகப் பண்பையே அடகு வைப்பவர்ன்னு எனக்குத் தெரியாது. நீங்கதான் உயிர்... என் வாழ்வுன்னு நம்பியிருந்தேன். என்னை ஏமாத்திட்டு வேற பெண்ணைக் கல்யாணம் செய்துக்கப் போறீங்க. ஆண்டவன் அதுக்காக உங்களுக்குச் சரியான தண்டனை கொடுப்பான். ஓர் ஆண் ஒரு பெண்ணைக் காதலிச்சுக் கைவிட்டா அதுக்காக அந்தப் பெண் காலமெல்லாம் கண்ணீர் சிந்தியே காலத்தைக் கழிப்பான்னு உங்க எண்ணமா? நீங்க பணம் பங்களாவோட சந்தோஷமா வாழணும். ஆனா நான் ஏன் என் வாழ்க்கையைப் பாலைவனமா ஆக்கிக்க வேணும்? உங்களை இழந்து என்னாலே வாழ முடியாது. அது உண்மைதான். ஆனா அதுக்காக நான் காலமெல்லாம் கண்ணீர் விடத் தயாராயில்லே. உங்க முன்னாடியே நான் நல்லபடியா வாழ்ந்து காட்டலே....''

சுநேகா அழுதுகொண்டே ஓடினாள்.

என் மனத்தில் லேசாக நிம்மதி பிறந்தது.

சுநேகா கொஞ்ச நாள் என்னை மறக்க முடியாமல் தவிப்பாள். பிறகு மனத்தைத் தேற்றிக் கொள்வாள். பெற்றவர்களின் கட்டாயத்தின் பேரில் கல்யாணத்துக்குச் சம்மதிப்பாள். வருங்காலக் கணவனுடன் வாழப் பழகிக் கொள்வாள். அவன் மூலமாவது அவளுக்கு அவள் விரும்பியதைப் போலவே அழகான குழந்தை கிடைக்கட்டும்.

நான்தான் அதற்குத் தகுதியில்லாதவன் ஆகிவிட்டேனே!

நேற்று சுநேகாவை இறக்கி விட்டு விட்டுப் போகும்போது நடந்த விபத்தில்—இடுப்புக்குக் கீழே பலமாக அடிபட்டதில் தந்தையாகும் பாக்கியத்தை இழந்துவிட்டேன்.

இந்த விஷயத்தைச் சுநேகாவுக்குச் சொன்னால் பொங்குவாள்... கதறுவாள்.

'எனக்குக் குழந்தை இல்லேன்னாலும் பரவாயில்லே... நீங்கதான் எனக்கு வேணும்' என்று என் மனத்தை மாற்ற முயலுவாள்.




காலமெல்லாம் அவள் குழந்தை பாக்கியமே இல்லாமல் இருக்க வேண்டும். அந்த வேதனையை என்னால் தாங்கிக் கொள்ள முடியாது.

அவள் விரும்பியதைப் போலவே கொழு கொழுன்னு ஒரு அழகான குழந்தை அவளுக்கு வரப் போகும் வருங்காலக் கணவன் மூலமாகக் கிடைக்கட்டும்.



# சஞ்சய்: செல்வந்தர் வீட்டு செல்லப்பிள்ளை

## கி.கஸ்தூரி ரங்கன்

**மே** 27, 1964 பிற்பகல் 2 மணி.

சுதந்திர இந்தியாவின் சிற்பி, பிரதமர் ஜவாஹர்லால் நேரு காலமாகிவிட்டார். 73 வயது வரை சுறுசுறுப்பான வாழ்க்கை, உலகையே துயரில் ஆழ்த்திய மரணம்.

நேருவின் பக்கத்தில் மகள் இந்திரா காந்தி இருந்தாள். ஆனால் கொள்ளிவிடப் பேரன்களில் ஒருவர் வந்தாக வேண்டும்; மூத்தவன் ராஜீவ் கேம்பிரிட்ஜில் இருந்தான். வருவதற்கு இரண்டு நாள் ஆகும். இளையவன் சஞ்சய் காஷ்மீரில் இமயமலையிடையே நண்பன் ஒருவனுடன் 'ட்ரெக்கிங்' போயிருந்தான்.

காஷ்மீர் முதல்வர் குலாம் சாதிக்குக்குச் செய்தி பறந்தது. சஞ்சயைக் கண்டு பிடித்து உடனே தனிவிமானத்தில் டில்லிக்கு அனுப்பும்படி.

சஞ்சய் காஷ்மீர் போனதற்கு ஒரு சுவாரசியமான பின்னணி உண்டு. பத்து நாட்களுக்கு முன்பாக டில்லியில் பெரிய இடத்துப் பிள்ளைகள் மூவர் ஒரு பியட் காரைத் திருடி, மோதிபாக் பெட்ரோல் பங்கில் 20 லிட்டர் போட்டுக் கொண்டு பணம் தராமல் விரைந்து ஓட்டிச் சென்று ஒரு கல்லில் மோதி விபத்துக்குள்ளாயினர். மூவரையும் போலீஸ் கைது செய்து மோதிபாக் காவல் நிலையத்துக்கு அழைத்துச் சென்றனர். இரவு நேரம். மிரட்டி விசாரித்ததில் ஒரு பையன் தன் விலாசம் தீன்மூர்த்தி பவன் என்று சொன்னான். போலீஸ் இன்ஸ்பெக்டருக்கு அதிர்ச்சி.

தீன்மூர்த்திக்குத் தகவல் அனுப்பினார். சில நிமிஷங்களில் பிரதமரின் காரியதரிசிகளில் ஒருவரான யஷ்பால் கபூர் ஆஜராகி மூவரையும் விடுதலை செய்து கொண்டு போனார். கேஸ் ஒன்றும் பதிவாகவில்லை.

அடுத்த நாள் காலையிலேயே சஞ்சய் காந்தியையும் நண்பன் ஒருவனையும் ஸ்ரீநகருக்கு விமானத்தில் அனுப்பி வைத்தனர். அங்கே உறவினர் ஒருவரின் வீட்டுக்கு இருவரும் சேறு படிந்த உடைகளுடன், தலையில் மண்ணுடன் போய் நின்றனர். அவர்களை எதிர்பார்த்திராத அவ்வீட்டுப் பெண்மணியிடம், ''ஆன்ட்டி, நாங்கள் டில்லியிலிருந்து மூணு நாளாக ஹிச்ஹைக் செய்து வந்து சேர்ந்திருக்கிறோம்'' என்று சஞ்சய் விளக்கம் தந்தான்.

திருடப்பட்ட கார் ஒரு ராணுவ அதிகாரியைச் சேர்ந்தது. அவருடைய சகோதரர் தரம் யஷ்தேவ் வீட்டு வாசலிலிருந்து விளையாட்டுத்தனமாக இளைஞர்கள் எடுத்துச் சென்றுவிட்டனர். விபத்துக்குள்ளாகி இருக்காவிட்டால் சில மணி நேரம் கழித்துச் சமர்த்தாகக் காரை மீண்டும் இருந்த இடத்திலேயே விட்டு விட்டுப் போயிருப்பார்கள். போலீஸ் கேஸ் எடுக்கப்படா விட்டாலும் யஷ்தேவ் மூலமாக விஷயம் அம்பலத்துக்கு வந்து

விட்டது. பத்திரிகைகளில் நேராகவும் மறைமுகமாகவும் சஞ்சய் காந்தியும் பிற பெரிய வீட்டுப் பிள்ளைகளும் கார் திருடும் விளையாட்டைப் பற்றிச் செய்திகள் வெளிவந்தன. பார்லிமெண்டில் கூட கேள்வி எழுந்தது. 'இப்படிக் கார் திருடப்பட்டது உண்மை தான். ஆனால் சஞ்சய் காந்தி அதில் சம்பந்தப்பட்டிருக்கவில்லை. சம்பவ தினம் அவர் காஷ்மீரில் இருந்தார்' என்று உள்துறை மந்திரி குல்சாரிலால் நந்தா சாதித்துவிட முடிந்தது.

சஞ்சய் காந்திக்கு டேராடூன் நாட்களிலிருந்தே கார் என்றால் மோகம். அசந்து மறந்து யாராவது காரை சாவியுடன் விட்டுப் போயிருந்தால் அதை எடுத்துக்கொண்டு ஒரு ரவுண்டு அடித்துவிட்டு ஓசைப்படாமல் திரும்ப இருந்த இடத்தில் விட்டுப் போவது வழக்கம். மலைச்சரிவில் காரைக் குலுங்கக் குலுங்க இறக்குவது, கண்மூடித்தனமான வேகத்தில் ஓட்டிச் சடாரென்று நிறுத்துவது, இப்படி அபாய விளையாட்டெல்லாம் பிடிக்கும்.

ஆனால் பள்ளிக்கூடத்தில் அதிகம் வம்பு தும்பில் ஈடுபடாமல் மந்தமான மாணவன் என்ற அந்தஸ்துடன் காலம் தள்ளி வந்தான். டூன் பள்ளியில் படிப்பில் தேர்ச்சிக்குத் தக்க படி பெஞ்சுவரிசைகளில் முன்னேற்றம் உண்டு. சஞ்சய் கடைசிவரை பின் பெஞ்சியிலேயே உட்கார்ந்திருந்தான். குறைந்தபட்ச மதிப்புக்களைப் பெற்று பெயிலாவதைத் தவிர்த்துக் கொண்டு எட்டாம் வகுப்பு வரை முன்னேறிவிட்டான். 'படிப்பில் சிரத்தையாக இல்லை. இன்னும் ஊக்கமாகப் படிக்கச் சொல்லுங்கள்' என்று டூன் பள்ளித் தலைமை ஆசிரியர் இந்திராவுக்குக் கடிதம் எழுதினார்.

இந்திரா சஞ்சயைக் கூப்பிட்டுப் பேசினார். டூன் பள்ளியின் நிர்ப்பந்தங்களும், செயற்கைச் சூழ்நிலையும் மகனின் சுதந்திரப் போக்குக்கு ஒத்துவரவில்லை என்பதை அறிந்து கொண்டார். நேருவுக்கு சஞ்சய் மேல் தனிப் பிரியம் உண்டு. 'அவனுக்குப் பிடிக்கவில்லை யென்றால் டில்லியிலேயே படிக்கட்டுமே' என்றார். ராஜீவ் வேறு டூன் பள்ளிப் படிப்பை முடித்துவிட்டு இங்கிலாந்தில் மேற்படிப்புக்குச் சென்றுவிட்டார்.

சஞ்சய் டில்லியிலேயே செயிண்ட் கொலம்பஸ் பள்ளியில் சேர்க்கப்பட்டான். அங்கேயும் படிப்பில் ஒருவித முன்னேற்றமும் இல்லை. மாறாக வேண்டாத சகவாசங்கள் ஏற்பட்டன.

நீண்ட நாள் குடும்ப நண்பராக இருந்த மகமது யூனுஸின் மகன் அடில் ஷராயர் சஞ்சயின் ஆத்ம சிநேகிதனாக இருந்தான். இருவரும் சேர்ந்து அடிக்காத கொட்டங்கள் இல்லை என்று சொல்வார்கள்.

நண்பர்களைக் கூட்டிக் கொண்டு கார்களில் சுற்றுவது தவிர பெண்களுடன் சேர்ந்து கும்மாளம் அடிப்பது வழக்கமான திருவிளையாடலாக இருந்தது. ஒரே ஒரு சம்பவம் தவிர பெண்கள் விஷயத்தில் சஞ்சய் வரம்பு மீறி நடந்துகொண்டு வம்பில் மாட்டிக் கொண்டதாகத் தெரியவில்லை.

பின்னாளில் இந்திரா பிரதமரான பின் ஓர் இரவு ஜீப் ஒன்று கேட்டை மோதி நொறுக்கிக் கொண்டு உள்ளே வந்தது. ஜகோதா சகோதரர்கள் என்று தங்களைச் சொல்லிக் கொண்ட இருவர் அவர்களின் சகோதரியைச் சஞ்சய் கெடுத்துவிட்டதாகவும், பிரதமரிடம் நியாயம் கேட்க வந்ததாகவும் ஆவேசமாகப் பேசினர். அவர்கள் ஜெயிலுக்குத்தான் போனார்கள். ஆனால் இதன் பிறகு சஞ்சய் பெண்கள் விஷயத்தில் ஜாக்கிரதையாக இருந்தார். பொதுவாகப் பணக்கார வீட்டுச் செல்லப் பிள்ளைகள் இளமை முறுக்கில் ஈடுபடும் காரியங்களில் சஞ்சய்க்கும் ஈடுபாடு இருந்தது பெரிய விஷயமில்லைதான்.

பிரதமர் வீட்டுப் பிள்ளை என்பதால் பெண்களைப் பெற்றவர்கள் சஞ்சய்யுடன் பழகுவதற்குத் தங்கள் பெண்களைத் தாராளமாக அனுமதித்து வந்தனர். சில 'அம்மா'க்கள் மேலே விழுந்து சஞ்சயிடம் பெண்களை அனுப்பி வைத்தனர். ஆனால் சஞ்சய் அப்படி ஒன்றும் செக்ஸ் விஷயங்களில் தீவிரமாக இருக்கவில்லை.

''எல்லா இளைஞர்களையும் போல அழகான பெண் என்றால் சஞ்சய்க்கு விருப்பம்தான். ஆனால் கார்களில்தான் அவனுக்கு அதிக மோகம்'' என்று அவர் நண்பர் ஒருவர் சொல்கிறார்.

பெரியவனாகும்போது தானே ஒரு நாள் கார் தயாரிக்கப் போவதாகச் சொல்லிக் கொண்டிருப்பான் சஞ்சய். இதில் அவனை அதிகம் ஊக்கியவர் தந்தை பிரோஸ் காந்தி. சமயம் கிடைக்கும்போது தம் சொந்தக் காரைத் திறந்து காட்டி சஞ்சய்க்கு எல்லா வித உறுப்புக்களையும் பற்றி விவரிப்பார்.

''பாலிடிக்ஸ் அது இது என்று இறங்கி விடாதே. மெக்கானிகல் எஞ்சினியரிங் படி'' என்று புத்திமதி சொல்வார்.

---



ஒருவர் கைரேகை ஜோஸியரிடம் கையைக் காட்டினார். ஜோஸியர் ''நீங்கள் மற்றவர்களிடம் கை நீட்டித்தான் பிழைக்க வேண்டும்'' என்றார். கைரேகை பார்க்க வந்தவருக்குக் கோபம் வந்து விருட்டென்று எழுந்து சென்று விட்டார்.

மற்றொரு நாள் ஜோஸியர் பஸ்ஸில் ஏறி வெளியூர் சென்றார். பஸ்ஸில் காசைக் கொடுத்து கண்டக்டரிடம் டிக்கெட் வாங்கினார். கண்டக்டர் கையை நீட்டிக் காசை வாங்கிப் போட்டுக் கொண்டபோது ஜோஸியர், ''நீங்கள் பிறரிடம் கை நீட்டித்தான் பிழைக்க வேண்டும் என்று நான் சொன்னது பலித்துவிட்டது அல்லவா?'' என்றார்!

- ஸ்ரீரங்கம் ரா. ராகவன்

14 வயதில் தன் தந்தையை இழந்தது சஞ்சய்க்கு ஏற்பட்ட பெரிய அதிர்ச்சி.

''அப்பா இறந்துவிட்டார் என்பதை அவனால் ஜீரணிக்க முடியவில்லை. வெகு நாட்கள் பிரமை பிடித்தவன் போல் இருந்தான்'' என்று அத்தை கிருஷ்ணா ஹத்தீசிங் குறிப்பிட்டார்.

பெற்றோர்கள் ஒன்றாக இருந்து அவர்களுடைய ஆதரவில் வளர்ந்திருந்தால் சஞ்சய் பொறுப்புடன் படித்து முடித்திருக்கக் கூடும். பிளவுபட்ட குடும்பத்திலேயே வளர்ந்து சிறு வயதிலேயே தந்தையையும் இழக்க நேரிட்டது.

நேரு இறந்தபோது சஞ்சய்க்கு 17 வயது முடிந்திருந்தது. சவ ஊர்வலத்தில் லட்சக்கணக்கான மக்கள் துயரத்துடன் பார்த்திருக்க சஞ்சய் சடலத்துடன் மயானம் சென்றான். மந்திரங்களைப் புரோகிதர் சொல்லிய வண்ணம் உச்சரித்தான். சிதைக்கு நெருப்பு வைத்தான். அம்மாவும் உறவினர்களும், பார்த்திருந்தோர் பெரும்பாலோரும் கண்ணீர் விட சஞ்சய் மட்டும் கலங்காமல் அவனை மிகவும் நேசித்த தாத்தாவின் மரணம் தன்னை எந்த விதத்திலும் பாதிக்காதது போல் நடந்து கொண்டது பலரை வியப்பில் ஆழ்த்தியது. அப்பா அம்மா ஒன்றாக வாழ முடியாததற்கு தாத்தாதான் காரணம் என்று அனுமானித்து அதனால் நேருவின்பால் பாசம் வற்றியிருக்கக் கூடும். பின்னால் குஷ்வந்த்சிங் இதைப்பற்றி சஞ்சயைக் கேட்டார்.

''எனக்கும் என் தாத்தாவுக்கும் உறவு சாதாரணமானதுதான். தனிப்பட்டு ஒன்றும் இல்லை'' என்றார் சஞ்சய்.

''நேருவின் கொள்கை, கருத்துக்கள் எதுவுமே உங்களைப் பாதிக்கவில்லையா?''

''ஊஹூம். எந்த வகையிலும் இல்லை.''

அரசியல் குடும்பத்திலேயே பிறந்து வளர்ந்த சூழ்நிலையில் சஞ்சய்க்கு இளம் வயதில் அரசியலைப் பற்றிய அதிக அறிவோ, சிரத்தையோ இல்லாமற் போனது அதிசயம் தான். நேருவின் வாக்குத் திறனோ, எழுத்தின் நேர்த்தியோ சஞ்சயைக் கவரவில்லை. ஏன், நேரு எழுதிய புத்தகம் ஒன்றுகூட அவர் படிக்கவில்லை.

தந்தை பிரோஸ் காந்தி சிறந்த பார்லிமெண்டேரியனாகப் பெயர் எடுத்தார். நேருவின் ஆட்சியின் குறைகளை அம்பலப்படுத்தும் வகையில் முந்திரா ஊழல் முதலானவற்றை வெளிக்குக் கொண்டு வந்தார். ஆனால் பாட்டனார், தந்தை வழியைப் பின்பற்றிப் பிற்காலத்தில் சிறந்த பேச்சாளனாக அரசியல் வாதியாக ஆகும் தகுதி சஞ்சய்க்கு அறவே இருக்கவில்லை.

உண்மையில் பையன் இப்படிப் படிப்பில் அக்கறை இல்லாமல் ஊர் சுற்றிக் கொண்டிருக்கிறானே என்ற கவலை இந்திராவுக்கு இருந்தது.

பள்ளிப் படிப்பைக் கூட சஞ்சய் முடிக்கவில்லை. மேற்கொண்டு பொறி இயலோ வேறு ஏதுமோ படிப்பதற்குக் கல்லூரியில் சேரத் தகுதி பெறவில்லை.

இதைப் பற்றி இந்திரா கவலைப்பட்டுக் கொண்டிருந்தபோது குடும்ப நண்பராகி

கச்சேரி முடிந்து செம்மங்குடி மேடையை விட்டு இறங்கும் முன்பே டஜனுக்கு மேற்பட்ட இளைஞர்கள் யுவதிகள் 'ஆட்டோ கிராப்' நோட்டுக்களை நீட்டினார்கள்.

''கையெழுத்துக்கு ஒரு ரூபா தாரும்''. என்றார் செம்மங்குடி.

கேட்டபடி பணம் தந்தார்கள். ஒரு பையன் ''ஒரு ரூபாய் எதுக்கு சார் வசூல் பண்றீங்க?'' எனக் கேட்டான்.

''தியாகராஜ சுவாமி ஆராதனை விழாச் செலவுக்குத் தான்! மயிலாப்பூர், திருவையாறு ஆகிய



இடங்களில் நடக்கிறதே அவற்றுக்குத்தான்!..'' என்றார் செம்மங்குடி.

நிதி அமைச்சர் ஆர். வெங்கட்ராமன், தேர்தலில் வெற்றி பெற்றவுடன், நங்கநல்லூர் லட்சுமி நரசிம்மர் ஆலயத்துக்கு வந்து வழிபட்டார்.

ஒரு யுவதி வெள்ளைத் தாளில் ஆட்டோகிராப் வேண்டினாள். ஆர். வி. எழுதியது அவரது 'ஆட்டோ கிராப்' அல்ல. ஸ்ரீராமஜெயம்!

யுவதி நன்றி கூறி, ''தினமும் எழுதுகிறேன்!'' என்றாள் பவிசு சென்று...!

-ஏ. சுவாமிநாதன்

♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦

விட்ட தரம் தேஜா பிரச்னையைத் தீர்க்க முன்வந்தார்.

சஞ்சயை லண்டன் அழைத்துச் சென்று ரோல்ஸ்ராய்ஸ் மோட்டார் கம்பெனியில் பயிற்சியாளராகச் சேர்த்துவிட்டார். அத்துடன் சஞ்சய்க்குத் தேவைப்பட்ட எல்லா வசதிகளையும் அவர் செய்து கொடுத்தார்.

தேஜா தன் அழகிய பனைவியின் கவர்ச்சியைப் பயன்படுத்தி வாழ்க்கையில் உயர்ந்தவர். நேருவின் நட்பைப் பெற்று 200 ரூபாய் மூலதனத்துடன் ஆரம்பிக்கப்பட்ட ஜெயந்தி கப்பல் கம்பெனிக்கு 2 கோடி ரூபாய் அரசாங்கத்திடம் இருந்து கடன் வாங்கினார். லண்டன், டோக்கியோ, நியூயார்க் என்றெல்லாம் ஆடம்பரமாகக் காரியாலயங்கள் அமைத்துக் கொண்டு கப்பல்கள் வாங்கி நஷ்டத்தில் நடத்தி பல நாட்டுக் கப்பல் கம்பெனிகளுக்கும், இந்திய அரசாங்கக் கடனுக்கும் நாமம் போட்டு ஜெயிலுக்குப் போனார்.

தேஜாவின் வியாபார முறைகள் சஞ்சய் காந்திக்கும் ஓரளவு அத்துப்படியாகி விட்டது என்பது அவர் மாருதி கார் கம்பெனியைத் துவக்கி நடத்தியபோது தெரிந்தது.

(தொடரும்)

“மூனு நாள் தவணை தாறன்.”

வல்லிபுரம் பரியாரியார் நெற்றியைச் சுருக்கித் தலையைச் சொறிந்து வழக்கமான பல அங்க சேஷ்டைகளால் தான் சிந்திப்பதாகப் பாவனை காட்டிக் கூறிவிட்டார். அவருக்குத் தெரியும் 'வருத்தம் கடுமை யில்லை' என்று கூறினால் எந்தப் பெரிய மருந்தைக் கொடுத்தாலும் பத்து ரூபாய்க்கு மேல் புரளாதென்பது. எத்தனை நாளாவது ஒரு தவணையைச் சொல்லி, அதற்குள் எதுவும் நடக்கலாம் என்று கூறித் தலையைத் தொங்கப் போட்டால்தான் ஐந்து நாள்களாவது வாரிச் சுருட்டலாம் என்பது அவரது தொழில் அனுபவம்.

“ம்... மூனு நாள் தவணை தாறம்.” என்று கூறிவிட்டுத் தலையை நிமிர்த்திய போதும் செல்லம்மாக் கிழவியின் கைநாடி ஓட்டத்தை இன்னும் அவர் கிரகித்து முடியவில்லை.

“பரியாரியார் என்ன வருத்தம்?... வயது போனப்பலை முற்றத்திலை ஓடியாடிக் கொண்டிருந்தபோ...” கிழவியின் ஒரே மகள் கமலம் கவலையை வார்த்தைகளால் திணிக்கிறாள். “கடுமைதான். மூனு நாள் தவணை தந்திருக்கிறன் பிறகென்ன?” என்றார் பரியாரியார்.

வல்லிப்புரப் பரியாரியார் இப்படித்தான் வருத்தம் இன்னது என்று நிச்சயிக்க முடியா விட்டால் கடுமை, தவணை என்ற வார்த்தைகளுள் ஒளிந்து கொள்வார். கிழவியைப் பார்த்தபடியே தமது மருந்துப் பெட்டியை எடுத்தார். கூடப் பிறக்கா விட்டாலும் அவர் உடலோடு ஓர் அங்கமாகவே மாறிவிட்டிருந்தது அந்த மருந்துப் பை. எந்த வருத்தத்துக்கும் அவரால் கொடுக்கக் கூடிய மருந்துகள் அத்தனையும் அந்தப் பைக்குள் அடக்கம். அது ஒரு அட்சய பாத்திரம் மாதிரி தான்.

“நாலு வேளைக்கு மருந்து இருக்கு. தேனிலை கரைச்சுக் குடுக்க வேணும். தண்ணிச் சாப்பாடு தாராளமாகக் குடுக்கலாம்.”

பரியாரியார் எழுந்தார். “நாளைக்கு வந்து பார்க்கிறேன்.”

எல்லோருக்கும் தெரியும். பரியாரியை விட்டால் பிடிக்க முடியாதென்பது. ஒரு அவசரம் என்றால் ஆளைப் பிடிக்க எந்தக் கள்ளுத் தவறணையென்று தேடுவது?

“பரியாரியார், உங்களை விட மாட்டோம் பக்கத்திலையே இருந்து சுகமானப் பிறகு தான்!” பரியாரியார் யோசிப்பது போல் பாவனை காட்டினார்.

“கள சோலியல் இருக்குது.”

“அதெல்லாம் வீடு தேடி வரும்” என்றார் விசயம் தெரிந்த ஒருவர்.

வேளைக்கு வேளை சாப்பாடு; தண்ணிச் சாப்பாடும் வரும் என்றால் பிறகென்ன? “சிவ சிவா” என்றபடி திண்ணையில் ஒரு புறத்தில் வந்து படுத்துக் கொண்டார் பரியாரியார்.

“செல்லம்மாக் கிழவி முடியப் போகுது” என்று வல்லிபுரப் பரியாரி உறுதிப்படுத்திய செய்தி ஊர் முழுதும் புகைந்து உறவினர் களைக் கூட வைத்தது. கிழவி வழக்கமாகப் படுக்கும் வடக்குத் திண்ணையிலிருந்து வெள்ளை விரிப்பு விரித்த கட்டிலுக்கு மாற்றப்பட்டாள். புல்லம்பாய்கள் வீடு முழு





மனைவி : [ஒரு வாரப் பத்திரிகையைக் காட்டிக் காட்டி] ''இந்தப் பத்திரிகையின் ஆசிரியருக்குப் போன் போட்டு நம் வீட்டு அட்ரஸை சொல்லுங்க!''
டைரக்டர் : ''ஏன்...?''
மனைவி : ''டைரக்டர் எங்கே இருக்காரேனே தெரியலேனு நீங்க டைரக்ட் செய்த சினிமா பத்தி இந்தப் பத்திரிகையில் விமர்சனம் எழுதியிருக்காரு!''
- உ. ராஜாஜி

வதும் பரப்பப்பட்டன. பக்கத்து வீட்டுத் திருப்பதி. மணித்தியாலத்துக்கு ஒருதரம் 'விசிற்' கொடுத்துக் கொண்டிருந்தாள். ஒவ்வொரு தடவை வரும்போதும் ஒரு சீலை. அதற்கு 'மாட்ச்' ஆன சட்டை. அவளது கணவன் கொழும்பிலே புடவைக் கடை வைத்திருப்பதை இப்படித்தான் வெளிப்படுத்த வேண்டும் என்று நினைத்தாளோ என்னவோ? செல்லம்மாக் கிழவிக்கு அருகில் தான் வந்து அமர்ந்து கொள்வாள். அப்போதுதான் சீலை எல்லோரது கண்களிலும் படும் என்பது அவள் எண்ணம்.

''திருப்பதி... இது ஆராதனாவே என்ன விலை?'' ''ஔவையார் சாரி உங்க கடையிலே என்ன விலை?''

வந்தவர்களில் பலருக்குச் செல்லம்மா என்றொரு கிழவி சாகக் கிடப்பதோ அதைப் பார்க்கவென்றுதான் தாம் வந்திருப்பதோ மறந்து விட்டது. திருப்பதியின் சீலைக் கண்காட்சி ஒரு பக்கம் அமளிப்பட்டுக் கொண்டிருக்க—

முற்றத்தில்—

''சரி சரி விண்ணாணம் பார்க்கிறதை விட்டுப் போட்டுத் தேவாரத்தைப் படியுங்க'' - ''பழைய ஊர் மேளம்'' குரல் கொடுத்தது. அவருக்குத் தெரியும் தன்னை விட்டால் வேறு யாரும் இல்லை யென்பது. ''இதை யெல்லாம சொல்லிக் காட்ட வேணுமா — நீங்கதானே பாட வேணும்'' என்றார் ஒரு கழுதை.

''புத்தகமில்லாமல்—'' ஊர் மேளம் இழுத்தார்.

''தேவாரப் புத்தகத்தை எடுத்துக் கொண்டுவந்து சிவசம்பரட்டைக் குடுங்கோ'' கழுதை கத்தியது.

சூழலில் அமைதியின் ஆட்சி.

செல்லம்மாக் கிழவியின் மகள் கமலம் தான் முன்னால் வந்து சொன்னாள்: ''இப்ப எங்கத தேவாரப் புத்தகம் கிடக்குது? என்ர பிள்ளையள் சினிமாப் புத்தகங்கள்தான் நிரம்ப வைச்சிருக்குதுகள்.''

''நாசமாப் போச்சுது.... பள்ளிக்கூடத்திலை படிக்கிற பொடியளுக்கெண்டாலும் தேவாரம் பாடமில்லையா?''

''என்ர பிள்ளையள் மற்றிலைதான் கெட்டிக் காரன்கள். சமய பாடத்திலே கொஞ்சம் வீக்'' என்றாள் கமலம்.

''பக்திப் பாட்டுப் புத்தகங்களெண்டால் இருக்குது'' என்று கொண்டு வந்து கொடுத்தான் கமலத்தின் மூத்த மகன்.

ஊர் மேளம் பாடத் தொடங்கிவிட்டது.

''கெட்டிக்காரிதான் எல்லோரையும் வரப் பண்ணிப் போட்டா... எனைய் என்னைத் தெரியுந்தானே'' உற்சாகத்தோடு கூறிக் கொண்டே கிழவிக்கு அருகில் வந்து அமர்ந்தாள், நாகமுத்து. சுற்றி வளைத்து மச்சான் முறை என்று அவளே சூழ இருந்தவர்களுக்குப் பறைசாற்றிக் கொண்டாள். 'ம்ம்'' செல்லம்மாக் கிழவி அடித் தொண்டைக்குள் முனங்கினாள். விளக்கம் கொடுத்தாள் மகள் கமலம்.

''அவவுக்கென்ன உங்களைத் தெரியாதா? குரலிலை மட்டுக்கட்டியிருப்பா.''

''பின்னை என்ர குரலைத் தெரியாமலா இருந்திருக்கும். என்னை நினைவு தப்பினாலும் என்ர நினைப்புத் தப்புமா? சீதேவி இருந்த இருப்பென்ன வளர்ந்த வளர்ப்பென்ன... ம்.... கிடக்கிற கிடப்பென்ன?'' பெருமை யடித்துவிட்டு ஒரு நெளிப்புடன் திரும்பி அமர்ந்தவள் கோப்பியைக் குடிப்பதில் கவனமானாள்.

மறுநாள் காலையில்தான் தகவல் கிடைத்துக் கொழும்பிலிருந்து வந்து சேர்ந்தான் கிழவியின் ஒரே மகன். வந்ததும் வராததுமாக ''தானம் கொடுக்க வேண்டும்'' என்ற கோரிக்கையை விடுத்தார் ஒரு பக்திமான்.

''இப்படி அம்மா நாலைஞ்சு தரம் இந்தா அந்தா எண்டு கிடந்தவதானே... முந்தியும் ஒருக்கா தானம் குடுத்திருக்கிறம்'' என்றான் மகன்.

''இல்லை தம்பி... இந்த முறை அம்மா சாகத்தான் போறா... என்ர மனமும் சொல்லுது. ஏன் அந்தக் குறையையும் விடுவான்?''

பசுக் கன்றைப் பிடித்து வந்து முற்றத்தில் கட்டிவிட்டுப் புரோகிதரை அழைத்து வரப் பேரன் புறப்பட்டு விட்டான்.





## ஜாக்கிரதை! இலங்கை வானொலி!

இலங்கை வானொலி நிலையம் ஒவ்வொரு சனியன்றும் இரவு 8.30. மணிக்கு நமது பிரபல இசை அமைப்பாளர்கள் பாடல்களை ஒலிபரப்பி அவை ஒவ்வொன்றும் வேறு எந்தப் படத்திலிருந்து யாருடைய இசையமைப்பைக் காப்பியடித்து உருவானது என்பதை மிகவும் தெளிவாக வெளிப்படுத்துகிறது! சமீபத்தில் இதில் அகப்பட்டுக்கொண்ட இசை அமைப்பாளர்கள் இளையராஜாவும், சங்கர்கணேஷும் -தகவல் : செல்வராஜ்



''அம்மா சாகத்தான் போறா — அவவை நல்லா அனுப்ப வேணும்'' தம்பியிடம் கமலம் கூறுவது கிழவிக்கும் கேட்டது.

கோபமும் எரிச்சலும் போட்டியிட முகத்தைச் சுளித்தாள். அவளது முகச் சுழிப்பைப் பார்த்து ''என்ர மருந்து வேலை செய்யுது'' என்றார் பரியாரியார். கிழவியின் மகனிடமும் பணம் கறக்க முடிவு செய்து விட்டார் என்பது இதன் அர்த்தம்.

பஞ்ச கல்யாணிக் குதிரையில் கிழவியின் பேரனை ஏற்றிக் கொண்டு விரைந்து வந்தார் புரோகிதர். தாலம், இவசம் என்றால் புரோகிதரின் சைக்கிள் பஞ்ச கல்யாணிக் குதிரைதான். இரண்டு வருடங்களுக்கு முன் இதே போல் புரோகிதரை அழைத்து வந்து பசுக் கன்று கொடுத்தனுப்பியதையும் ஆச்சி பிழைத்து எழுந்ததையும் நினைத்துப் பார்த்த பேரனுக்குச் சிரிப்பு வந்தது.

பசுக் கன்றுடன் புரோகிதர் புறப்பட்டு விட்டார்.

இரவு. பெட்ரோமாக்ஸ் வெளிச்சத்தில் வீடு மூழ்கிக் கிடந்தது. முற்றத்தில் இருந்த வாங்கில் அமர்ந்திருந்து ஏழெட்டு ஆண்கள் சீட்டாடிக் கொண்டிருந்தார்கள். கிழவியின் கால்மாட்டுக்கு இப்பால் நாலைந்து குமரிப் பெண்கள் சினிமாக் கதை அளந்துகொண்டிருந்தார்கள். கிழவியைச் சுற்றியிருந்த வயதான பெண்கள் ஊர்க் கதைப் பிரசங்கத்தில் ஆழ்ந்து விட்டார்கள்.

பரியாரியார் 'கன்று வேண்டாம் கறுப்புத்தான் வேண்டும்' என்று அடம் பிடித்து வென்றுவிட்டதன் விளைவாக உலகையே மறந்து விழுந்து கிடந்தார். கிழவிக்காகக் கூடியிருந்தவர்களில் யாருக்குமே கிழவியின் நினைவு இல்லை. கிழவி தனித்து விடப்பட்டாள். நாலைந்து தேவாரங்களைப் பாடக் கேட்டாலாவது மனம் அமைதிப்படும். இப்போது அமைதியைக் குலைத்துக் கொண்டிருந்தது இளைஞர்களின் சினிமாப் பாட்டு. கிழக்குச் சாருக்குள் இருந்து அவர்கள் பாடிக் கொண்டிருந்தார்கள்.

கிழவிக்குத் தன் நினைப்பிலே தவிப்பாக இருந்தது. உயிர் உடலுடனே யிருக்க உள்ளம் மட்டும் தனி உலகத்துக்கு ஓடிவிட்டது. இத்தனை அவலத்துள்ளும் அந்த உலகத்தில் தான் எவ்வளவு அமைதி!

தனது தாய் படுத்த படுக்கையாகக் கிடந்த அந்த நாட்களை நினைத்துப் பார்க்கிறாள் செல்லம்மாக் கிழவி.

ஒரு நாளா இரண்டு நாளா? மூன்று வருடங்கள் படுத்த படுக்கையாகச் சலம் மலத்துக்குக்கூட எழுந்து செல்ல முடியாமல் கிடந்தாள் தாய். சிறிதுகூட மனம் சலிக்காமல் கடவுள் திருப்பணி போன்ற பய பக்தியுடன் கடமை செய்தாள் செல்லம்மா.

''என்ர சீதையை விட்டிட்டு நான் எங்க போவன்?'' என்று தாய் கூறும்போது செல்லம்மாவின் உச்சி குளிரும்.

அந்த நாள்....

இப்போதைய வல்லிபுரப் பரியாரியின் தகப்பன் அருணாசலப் பரியாரி வந்து, 'உன்மையாகவே' இரண்டு தவணை சொன்னதும் புரோகிதருக்குத் தானம் கொடுத்ததும் — இரவு பகல் என்று பாராமல் தான் தேவாரம் பாடிக் கொண்டு கண்ணிலே வாய்க்கால் கட்டி ஆறு வழிந்தோட இருந்ததும் இப்போது போல் கண் முன்னே தெரிகிறது. சோகமே வடிவங்களாய் உற்றார் உறவினர்களெல்லாரும் கூடியிருந்து சொந்தத் தாயாகவே எண்ணி அவள் உயிருக்காக மன்றாடிக் கொண்டிருந்ததும் —

''ம்...'' செல்லம்மாக் கிழவியின் பெருமூச்சு இன்றைய அவலத்தைப் பார்த்து அவள் ஆத்மாவின் துயர மூச்சு.

''இழுக்குது — முடியப் போகுது போலை'' பலரும் கிழவியை மொய்த்தார்கள்.

எப்போது போவாள் என்று காத்துக் கிடப்பவர்களை நினைக்க வேதனை மிகுந்தது செல்லம்மாக் கிழவிக்கு. பிணந் தின்னிச் சமுகுகளின் நடுவே அகப்பட்டு விட்டது போன்ற உணர்வு. மற்றவர்கள்தான் அப்படியென்றாலும் பரவாயில்லை. தான் பெற்று வளர்த்த பிள்ளைகள்?

கிழவி இன்னும் சாகவில்லையே என்ற ஏமாற்றத்தோடு கிழவியை விட்டு விலகியவர்கள் தங்கள் தங்கள் பொழுது போக்குகளில் மூழ்கிவிட்டார்கள்.

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

''நீங்க சினிமாவா இருந்தாலும் படம் பளிச்சுன்னு தெரியுதே!''

''முதல்லேயே இரண்டு சோப் விளம்பரம் படம் போட்டிருக்காங்க. அதனாலே தான் பளிச்சின்னு இருக்கு!''

-கே. ஆர். எம்.



எதிலாவது தோல்வியுற்றதால் சலித்திருக்கிறீர்களா? அப்படியானால் படியுங்கள்.

வருடம்

1831 வியாபாரத்தில் தோல்வி
1832 ராஜ்ய சட்டசபைத் தேர்தலில் தோல்வி
1833 மீண்டும் வியாபாரத்தில் தோல்வி
1834 ராஜ்ய சட்டசபைக்குத் தேர்ந்தெடுக்கப்படல்
1835 காதலி மரணம்
1836 நரம்பு தளர்ச்சி
1838 சபாநாயகர் தேர்தலில் தோல்வி
1840 தேர்வு அதிகாரியாகப் போட்டியிட்டுத்தோல்வி
1843 மத்திய சட்டசபையில் தோல்வி
1846 மத்திய சட்டசபையில் வெற்றி
1848 மத்திய சட்டசபையில் தோல்வி
1855 மத்திய மேல் சபையில் தோல்வி
1856 உப ஜனாதிபதி தேர்தலில் தோல்வி
1858 மத்திய மேல் சபையில் தோல்வி
1860 அமெரிக்க ஜனாதிபதி'

இது உலக புருஷர்களில் ஒருவராகிய ஆப்ரஹாம் லிங்கனின் வாழ்க்கைச் சுருக்கம். - க. முருகவேல்

---

கோபங்கள், தாபங்கள் என்று எதையுமே பாராமல் உறவினர்கள் எல்லாம் கூடியிருக்கப் பால் பருக்கிய கையோடு தாயின் உயிர் பிரிந்து போனதை நினைத்துப் பார்த்தாள் செல்லம்மாக் கிழவி. ''ம்.... சீதேவி போனாள் அண்டைக்குப் பிடிச்ச சனியன் தான்'' என்று மரணத்தின் பின்னரும் அவளுக்குப் பெருமை! இன்றோ தனக்கென்றிருந்த கணவனின் அணைப்பும் போய்விட, அதனால் தான் இவள் எப்போது சாவாள் என்று ஆசையோடு காத்திருக்கிறார்கள். இந்த உலகத்திலே தனித்துப் போய் இருக்க வேண்டி வந்துவிட்டது. சுற்றியிருப்பவர்களிடம் தோற்றுவிட்டுப் போய்விட விரும்பாமல் இரண்டு நாட்களின் பின் செல்லம்மாக் கிழவி எழுந்து உட்கார்ந்துவிட்டாள். கிழவிக்கு இப்போது நல்ல சுகம் என்பதைக் கண்டுகொள்ளப் பரியாரிதான் தேவையில்லை. வருத்தம் பார்க்க வருபவர்களிடமெல்லாம் ''எப்படி சுகமா இருக்கிறியளா?'' என்று கேட்கும் நிலைக்குக் கிழவி வந்துவிட்டாள் என்றால்—

இனியும் 'தவணை'க் கதையுடன் இங்கே படுத்துக் கிடக்க முடியாதென்பதால் தன் மருந்துகளின் மாண்பைப் பற்றிப் பிரசாரம் செய்துவிட்டுப் பணத்தை வறுகிக்கொண்டு வல்லிபுரப் பரியாரி போய்விட்டார்.

விழா முடிந்த மண்டபம் போல் இருந்தது வீடு. நாலைந்து பேர்தான் கூடியிருந்தார்கள்.

''எனக்குத் தெரியும் அம்மா சாகமாட்டா வென்று — அவ முதலே கனவிலே சொல்லியிருக்கிறா சித்திரைக்குத்தான் போவனெண்டு அதுக்கு முந்தி ஒரு நாளும் போகமாட்டா— சித்திரையில்தான்.'' கமலம் மகிழ்ச்சியோடு கூறுகிறாள்.

மகிழ்ச்சியா? சித்திரைக்கு இன்னும் இரண்டே மாதங்கள்தானே இருக்கின்றன? இப்படிக் குறித் திருப்திப்படுத்த முனை கிறாளா?

செல்லம்மாக் கிழவிக்கு மகள் கூறிய வார்த்தைகள் சம்மட்டி அடியாக நெஞ்சில் விழுகின்றன. ஒரு கவளம் சோற்றுடன் மூலையில் கிடக்கின்ற நானென்ன அவளுக்குப் பெரிய பாரமா? தீராச் சுமையென்றல்லவா இறக்கி வைக்கத் துடிக்கின்றாள். அந்தக் காலத்தில் இரண்டு வருடங்கள் அம்மாவைப் படுக்கையில் வைத்துப் பராமரித்தேன் நான்.

இன்று?

ஏதோ ஒன்றிரண்டு நாள் படுக்கையில் விழுந்ததற்கே....

''தங்கச்சி...; பொங்க வியாபாரமும் நான் இங்க வந்ததாலைப் பழுதாப் போச்சுது.... இனிச் சித்திரைக்கெண்டால் வருசப் பிறப்பு வியாபாரமும்.... அம்மா கட்டாயம் போவா வெண்டால்தான் அறிவிக்க வேணும்'' என்றான் மகன் தமக்கையிடம்.

செல்லம்மாக் கிழவியின் இதயத்தில் 'சுள்' ளென்று வலித்தது.

வாழ்க்கையே நஞ்சாக — சித்திரை யென்ன அதற்கு முதலே இந்த உலகத்தை விட்டுப் போய்விட வேண்டும் போல் ஆசை துளிர்த்தது. வாழ வேண்டும் என்ற நினைப்பையே இழந்துவிட்டுச் செல்லம்மாக் கிழவி சாவுக்குக் காத்திருந்தாள்.

அவள் வாழ நினைத்த காலமும் ஒன்றிருந்தது.

அது அந்தக் காலம்.

சீதேவிகள் வாழ்ந்த காலம். இது?...

---



திருமணத்திற்கு வாங்க வேண்டிய சாமான்களின் பட்டியல் போடும் போது தமிழர்களாகிய நாம் மஞ்சள் அல்லது 'குங்குமம்' என்று முதலில் எழுதுவது போல வங்காளிகள் முதலில் 'மீன்' என்று தான் எழுதுவார்கள்.

பருப்பில்லாத திருமணம் தமிழ் நாட்டில் இல்லை. 'மீன்' இல்லாத திருமணம் வங்காளத்தில் இல்லை.

திருமணத்திற்கு மறுநாள் ஒரு பெரிய தாம்பாளத்தில் பெரிய மீன் ஒன்றை வைத்து அதன் மீது வர்ணங்கள் தடவி மாப்பிள்ளையும் பெண்ணும் அதன் அருகே நின்று பூஜை செய்யவேண்டும். சாகும் வரை மீன் சாப்பிடக் கொடுத்து வைக்கவேண்டும் என்பதே பிரார்த்தனை.

—பி. நாராயணன்



# கல்கி

சந்தா விவரம்

★

| | ஓராண்டு | ஆறு மாதம் |
|---|---|---|
| இந்தியா | ரூ. 46 | ரூ. 23 |
| இலங்கை (இந்திய நாணயப்படி) | ரூ. 64 | ரூ. 32 |
| இதர வெளிநாடுகள் | ரூ. 100 | ரூ. 50 |

மானேஜர்

கல்கி, சென்னை - 600 032

# கடுகு பதில்கள்



✠ டி. என். அன்புத்துரை, காளையார் கோவில்
கே. உங்கள் பெயரை கடுகுதாசன் என்று மாற்றிக் கொண்டால் என்ன? ஸ்டைலாக இருக்குமே!
ப: ஸ்டைலாக இருக்க வேண்டும் என்று கமலஹாசன் தன் பெயரை, என்னைப் பார்த்து மூன்றெழுத்துப் பெயராக 'கமல்' என்று வைத்துக்கொண்டிருக்கிறார். நீங்கள் பிளேட்டையே திருப்புகிறீர்களே!

✠ வி. ராதாகிருஷ்ணன், திருச்சி-5
கே. துணுக்கு எழுத்தாளனான எனக்குத் தாங்கள் கூறும் அறிவுரை என்ன?
ப: கூடியவரை சொந்த அனுபவத்தில் கண்டதை எழுதுங்கள். அதிகம்பேர் படித்திராத புத்தகங்கள், பத்திரிகைகளிலிருந்து சுவையான செய்திகளை எழுதுங்கள். 'ஆப்ரிக்காவில் மூவாயிரம் வகையான கொசுக்கள் இருக்கின்றன' என்பதுபோன்ற சுவையில்லாத புள்ளி விவரங்களை எழுதாதீர்கள். திருச்சியில் இருந்து கொண்டு பம்பாயில் உள்ள ஒரு சினிமா நடிகையைப் பற்றிய ரகசியத்தை நேரில் அறிந்தவர் போல் எழுதாதீர்கள். இன்று தமிழ்ப் பத்திரிகைகளுக்குத் துணுக்குகள்தான் வரப்பிரசாதம், சாபக்கேடு இரண்டுமாக உள்ளன.

✠ மீனாக்ஷி வேணுகோபால், பெங்களூர்
கே. சமீபத்தில் மனநிறைவு ஏற்படுத்திய செயல்?
ப: மனநிறைவு ஏற்படுத்திய ஒரு விஷயத்தைச் சொல்கிறேன். மழலைப் பட்டாளம் படம் பார்க்கச் சென்றேன். ஹவுஸ் ஃபுல்லாக இருந்ததைப் பார்த்து உற்சாகமாக இருந்தது. போட்டி போட்டுக் கொண்டு ஒரே 'ஏ' படங்களாகச் சாகுபடி செய்து, இந்த நாட்டு இளைஞர்களிடமிருந்து பணத்தை அறுவடை செய்துகொண்டிருக்கும் சமயத்தில் மழலைப் படம் ஒன்று மக்களின் ஆதரவு பெற்று வருவது நிறைவு ஏற்படுத்தியது.

✠ என். பானு, திருச்சி-18
கே. ஹிந்துவில் வரும் அண்மைக்கால கார்ட்டூன்கள் கூர்மையாகவும் நயமாகவும் அமைவதை ரசிக்கிறீர்களா?
ப: ரசிக்கிறேன். கூர்மைக்கும் சாமர்த்தியத்துக்கும் பெயர் போன கார்ட்டூனிஸ்ட் ராஜிந்திர் பூரிதான். ஸ்டேட்ஸ்மேனில் போட்டுக் கொண்டிருந்தார். (லோகதளின் காரியதரிசியாகவும் இருந்தவர் இவர்.) தற்சமயம் ஸ்டேட்ஸ்மெனில் கார்ட்டூனிஸ்ட் விஜயனுக்குத்தான் முதல் பரிசு தருவேன்.

✠ ஆர். ஜகதீசன், பங்காரபேட்
கே. தாங்கள் மனைவிக்குப் பயப்படுவது உண்டா?
ப: கணவனும் மனைவிக்குப் பயப்பட வேண்டும்; மனைவியும் கணவனுக்குப் பயப்பட வேண்டும். வாழ்க்கை எனும் வாகனத்துக்கு இந்த இரண்டு பயங்களும் சிறந்த பிரேக்குகள். பல விபத்துக்களைத் தவிர்ப்பவை. சம்பாதிப்பதால் தனக்கு எந்த விதக் கட்டுப்பாடோ தடையோ பயமோ தேவையில்லை என்று கருதும் கணவன்களால்தான் பல குடும்பங்கள் குழப்பங்களாக ஆகி உள்ளன.

✠ என். ஆர். பத்மநாபன், தஞ்சை
கே. தஞ்சையில் உங்களுக்குப் பிடித்த இடம் எது?
ப: அமரர் கல்கியின் கட்டுரைகளைப் படித்து ஆர்வத்துடன் தஞ்சைப் பெரிய கோயிலை பார்க்கச் சென்றேன் சில ஆண்டுகளுக்கு முன்பு. பராமரிப்பு சரியாக இல்லாமல் பரிதாபமாக இருந்த கோவிலைப் பார்த்து வேதனை ஏற்பட்டது. சமீபத்தில் சரஸ்வதி மகால் லைப்ரரிக்குச் சென்றேன். அது ஒரு வைரச் சுரங்கம். புத்தகங்களையும் சுவடிகளையும் 'கார்ட் — இன்டெக்ஸ்' பண்ணி வைத்தால் தேவையான தலைப்பில் உள்ள புத்தகங்களை எடுக்க முடியும். ஆள் பற்றாக்குறை காரணமாக இந்த வேலை ஆமை 'ஸ்லோ'வில் (வேகம் என்ற வார்த்தை வரலாமோ?) போகிறது. இந்த இன்டெக்ஸ் வேலை முடிவடைந்துவிட்டால், இந்தப் புத்தகசாலையைப் 'பிடித்த இடம்' என்பேன்.

✠ ஆர். மார்க்கண்டன், விழுப்புரம்
கே. தங்கவிலை உயர்வால் தங்களுக்கும் பாதிப்பு உண்டா?
ப: இப்போதெல்லாம் அதிகமாகப் பொன்மொழிகளை உதிர்க்க முடிவதில்லை, கட்டுப்படியாகவில்லை, பிரதர்.

பரிசு பெறுபவர்:

**வி. ராதாகிருஷ்ணன்**
**5. தெற்குத் தெரு,**
**திருவானைக்காவல், திருச்சி-5**






மனக் கண்ணாடியைக் கழுவித் துடைப்பதாக; ஸம்ஸாரமாகிய பெருங் காட்டுத்தீயை அணைப்பதாக; மேன்மை எனும் அல்லியை அலர்த்தும் நிலவாக; ஞானக் கன்னிகைக்கு உயிராக; ஆனந்தக் கடலைப் பொங்க வைப்பதாக ஒவ்வொரு எழுத்திலும் அமுதத்தின் நிறைவான சுவையை ஊட்டுவதாக; ஆவி முழுமையும் குளிர முழுக்குவதாக; உத்தமோத்தமானதாக — இப்படியெல்லாம் ஸ்ரீ கிருஷ்ண ஸங்கீர்த்தனமானது வெற்றி கொண்டு விளங்குகிறது. (1)

பகவானே! பல பல நாமாக்களை வைத்தாய்; ஒவ்வொன்றிலும் உனதேயான அத்தனை ஆற்றல்களையும் உறைவித்தாய்; (இந்த நாமங்களில் பிடித்தமான எதனையும்) (ஸ்மரிக்கக் காலம் (தேசம் முதலிய எந்தக் கட்டுப்பாடுகளையும்) விதிக்காமலும் விட்டாய். உனது அருள் இப்பேர்ப்பட்டதாக உள்ளது. என்னுடைய கொடுவிதி எப்பேர்ப்பட்டது எனில் நாமாவில் எனக்குக் காதல் பற்று பிறக்க மாட்டேன் என்கிறது! (2)

புல்லையும் விடத் தாழ்ந்து கிடப்பவனாகவே விருக்ஷத்தை விடப் பொறுமை பூண்டவனாக, மானம் மரியாதை உணர்வற்றவனாக; பிறரை வெகுமானித்து மரியாதை செய்பவனாக எவன் இருக்கிறானோ அவனாலேயே ஹரி எக்காலும் (உணர்ந்து) கீர்த்தனம் செய்யத் தக்கவன். (3)

ஜகதீச! நான் தனம், ஜனம், வனிதை, கவிதை எதற்கும் ஆசைப்படவில்லை. இறைவனை உன்னிடம் காரணம் காணா பக்தியொன்றையே ஜன்ம ஜன்மங்களிலும் வேண்டினேன். (4)

ஸமநிலையைக் குலைக்கும் ஸம்ஸார ஸமுத்ரத்தில் வீழ்ந்து விட்ட அடிமை என்னை, ஹே நந்தகுமாரா! கிருபையோடு உன் பாத பங்கஜத்திலுள்ள ஒரு பூந்தாதுவுக்கு ஸமமாக உயர்த்தத் திருவுளம் பற்றுவாய்! (5)

நின் நாமத்தைப் பற்றிய மாத்திரத்தே என் கண்கள் முகமெல்லாம் நீர்த்திரை பொழிய, நாத்தழுத்து வாக்குத் தடைப்பட தேஹமெல்லாம் ரோமாஞ்சனமுற ஆகும் நாள் எந்நாளோ? (6)

கோவிந்தனின் பிரிவாற்றாமையில் எனக்கு நிமிஷம் யுகமாச்சு; கண்கள் மாரிக்காலமாயின; ஜகமெல்லாம் சூன்யமாச்சு. (7)

அந்தப் பிரேம வஞ்சகன் என்னை அணைத்துக் கொண்டாலும் சரி, மிதித்துத் துவைத்தாலும் சரி, அல்லது தரிசனம் தராமல் என் உயிரின் மர்மத்தையே ஹதம் செய்தாலும் கூடச் சரி, எப்படியெல்லாம் விரும்புகிறானோ அப்படிச் செய்து விட்டுப் போகட்டும் — அவனொருவனேதான் என் பிராணநாதன் வேறெவருமல்லர். (8):

''சிக்ஷா அஷ்டக''த்தின் தமிழாக்கம்;

**ரா. கணபதி**

---

## சாலையின் மேல் வீடுகள்!

மேற்கு பெர்லினிலுள்ள ஒரு சாலைக்கு மேல் கூரை உண்டு! இந்த மூடப்பட்ட பாதையமைப்பு ஐரோப்பாவிலேயே மிக நவீன கட்டிட அமைப்பாகக் கருதப்படுகிறது. பாதை ஆறு பிளவுகளாக உள்ளது. பாதையின் மேல் 1064 ஃபிளாட்டுகள் 2500 பேர் வசிப்பதற்கு ஏற்றதாகக் கட்டப்பட்டுள்ளன! இவ்வீடுகள் அதிர்ச்சி மற்றும் ஒலி தடுப்புள்ளவை. ஃபிளாட்டுகளின் ஒரு சிறப்பு அம்சம் தற்காலிக சுவர்கள். இவற்றை நீக்கியோ நகர்த்தியோ அறைகளின் பரப்பை அதிகரிக்கவோ குறைக்கவோ முடியும்!

ஆதாரம்: ஸ்காலா, -தகவல்: முருகவேல்



**திரு. விஜி. சந்தானம்**
*(எக்ஸிகியூடிவ் டைரக்டர், பிரேக்ஸ் இந்தியா லிமிடெட்)*

லயோலாவில் பி. காம் முடித்து சார்ட்டர்டு அக்கவுண்டன்ஸி படிப்பில் கபாடியா தங்க மெடல் பெற்று முதல் தரத்தில் தேர்ச்சி பெற்றவர் விஜி சந்தானம். எம்.பி.ஏ., படிப்பு மிச்சிகன் பல்கலைக் கழகத்தில்.

விஜயராகவன் என்கிற முழுப் பெயர் பள்ளியில் படிக்கும் போதே விஜி என்று பதிவாகி விட்டது. அதனால் இன்னமும் இவர் ஒரு பெண் என்று எண்ணிக் குழம்புவோருண்டு!

டென்னிஸ், கிரிக்கெட் ஆட்டங்களில் ஈடுபாடு கொண்ட இவருக்குப் பொழுது போக்கு என்று சொல்ல வேண்டுமானால் புகைப்படக் கலைதான். தொல் பொருளியல் மாணவியான தன் மனைவி சித்ராவுடன் கலைச் சிறப்பு வாய்ந்த ஹம்பி, ஹளபேடு, போன்ற இடங்களுக்குக் காமிராவுடன் போவதுண்டு.

நிம்மதியாக உறங்கப் பழகிக் கொள் — என்பது இவருடைய தந்தையாரின் (டி.எஸ். சந்தானம்) அறிவுரை. ''கடுமையாய் உழைத்து, நேர்மையாய் இருந்தால், நிம்மதியான உறக்கம் தானே வரும்'' என்கிறார் விஜி.

''தொழில் துறையில் அரசியல் கலப்பற்ற, தொழிலாளர்களே இடம் பெறும் சங்கங்கள் ஆரோக்கியமான உறவுக்கு வழிவகுக்கும். தொழிலாளர்கள் நிருவாகத்தினரைச் சுலபமான முறையில் அணுகிக் கோரிக்கைகளைச் சொல்லும் நிலை சிறப்பானது'' என்ற கருத்துடைய திரு விஜி சந்தானம் ஒவ்வொரு கம்பெனிக்கும் ஒரே தொழிற்சங்கம் தான் இருக்க வேண்டும் எனவும் கருதுகிறார்.

விஜி. சந்தானம்



# புதிய தலைமுறை

**திரு. ஏ. ஆர். ஸ்ரீநிவாசன்**
*(நாடகத்துறை)*

தொழில் முறையில் 'ஸ்பீட் எ வே' மோட்டார் வாகன உறுப்புக்கள்நிருவனத்தில் ஜெனரல் மானேஜராய்ப் பணியாற்றும் திரு ஏ. ஆர். எஸ்., தயாரித்து வழங்கிய பதினொன்று நாடகங்களில் பதினொன்று வெள்ளி விழாக் கொண்டாடியவை,



ஏ. ஆர். சீனிவாசன்

தாவரவியலும், சட்டமும், படித்த இவர் பன்னிரண்டு ஆண்டுகள் தீவிரமாய்க் கிரிக்கெட் ஆடியவர். 'நாலு பந்துகளில் நாலு விக்கெட்டுகள்' என்று ஒரு லீக் மாட்சில் சாதனை புரிந்தார்.

கூட்டுக் குடும்ப முறையின் அவசியம் பற்றிய 'சக்கரம் சுழல்கிறது' இவருடைய அண்மைக்கால நாடகம்.

புகைப்படக் கலையில் ஆர்வம் உள்ள திரு ஏ.ஆர்.எஸ். பம்பாயில் நடந்த அகில இந்தியப் புகைப்படப் போட்டியொன்றில் பரிசும் பெற்றதுண்டு. மரபுவழி சித்திரக் கலையிலும் ஈடுபாடுண்டு.

மூன்றாண்டுகளுக்கு முன்னால் அகில இந்திய ரீதியில் வியாபாரச் சாதனைக்காகப் பரிசு பெற்று, அமெரிக்கா, பாரிஸ், லண்டன் போய் வந்தபோது அங்குள்ள நாடக அரங்கங்களைப் பற்றியும் அறிந்தார். ''ஆனால் இங்கே டி.வி.யும்., புதிய பாணித் திரைப் படங்களின் வருகையும் சபா நாடகங்களின் எண்ணிக்கையைப் பெருமளவில் பாதித்துள்ளன'' என்று வருந்துகிறார்.

**திரு. மு. வேலாயுதம்**
*(பதிப்பாளர் — இலக்கிய ரசிகர்)*

கடந்த இரண்டு ஆண்டுகளாய்க் கோவையில் 'வாசகர் திருவிழா' என்ற பெயரில் பெரும் புத்தகக் கண்காட்சியை நடத்தி வரும் இந்த இளைஞர் மதுரை மாவட்டம் உலகநாதபுரத்தில் பிறந்தவர். தொழில் வியாபாரம்.

டாக்டர் மு. வ., நா.பா. ஆகியோரின் எழுத்துக்களால் கவரப்பட்ட வேலாயுதம், பண்பட்ட வாசகராக இருந்து பதிப்புத்துறையில் நுழைந்தவர். (கோயம்புத்தூர் விஜயா பதிப்பகம்).

''வியாபாரத்தில்தான் நேர்மை வேண்டும் என்பதில்லை. இலக்கியத்திலும் நேர்மை வேண்டும். சமுதாயத்தைப் பண்படுத்துகிற தன்மை வேண்டும்'' என்று சொல்லும் வேலாயுதம் இப்போதும் 'அப்டுடேட்' வாசகர். தினமும், கடை வியாபாரம் முடிந்து வீடு சென்றதும் இரவு 1½ முதல் 2 மணி வரை படிக்கிறார்!



மு. வேலாயுதம்

இதுவரை இவர் எதுவும்எழுதியதில்லை. என்றாலும், நண்பர்களுக்கும் மற்ற பதிப்பகங்களுக்கும் எழுதும் கடிதங்கள் சுவையாக இருக்கும்.

எழுத்தாளர் — வாசகர் — பதிப்பாளர் இவர்களிடையே இணைப்புச் சங்கிலியாக விளங்குவதில் ஆர்வமுடைய மு. வேலாயுதம் ''வாசகர் திருவிழா''வில் பல எழுத்தாளர்களையும் வரவழைத்து ''எழுத்தாளர் - வாசகர் சந்திப்பு'' ஏற்பாடு செய்துள்ளது வெளியூர்களில் புதுமையான ஒன்று.

பொழுது போதவில்லை என்கிற மு. வேலாயுதம், படிக்க வேண்டும் என்பதற்காக மேலும் பொழுதைத் தேடுகிறார்! — அப்பாலன்

# உறவின் கைதிகள்



## ஜெயலலிதா

ஓராயிரம் இளம் பார்வைகளில்
மூழ்கியும்
முன்பெல்லாம்
என் மனம் கரையவில்லை
இன்று - இது என்ன அதிசயம்!
ஒரே விநாடியில்
உன் சரப்பார்வையில்
என் மனம் உடைபட்டு விட்டதே!
- மீரா (கனவுகள் + கற்பனைகள் = காகிதங்கள்)

### 6

கல்லூரி ஆண்டு விழா முடிந்து இரண்டு நாட்கள் நகர்ந்துவிட்டன. தாங்க முடியாத பொறுமையின்மையோடு ராஜீவ் தவித்துக் கொண்டிருந்தான். இதுவரை உஷாவிடமிருந்து ஃபோன் கால் வரவில்லை.

இதற்குள் ஆயிரம் தடவையாவது சுரேஷிடம் ''நிஜமாகத்தான் என் சீட்டை உஷா கிட்டே கொடுத்தியா?'' என்று ராஜீவ் விசாரித்திருப்பான்.

''நிஜமாத்தான் கொடுத்தேன் சார்.''

'இதோ பார், சுரேஷ். பொய் சொல்லாதே. உண்மையா அவள் கையிலேயே அதைக் கொடுத்தியா?''

''சத்தியமாச் சொல்றேன் சார். அவங்களைப் பார்த்து அவங்க கையிலேயே கொடுத்தேன்.''

''என்னை நீ ஏமாத்தலியே சுரேஷ்?''

''சார், நான் ஏன் சார் அப்படிச் செய்யப் போறேன்?''

''இட்ஸ் ஆல்ரைட், சுரேஷ். நீ போகலாம்.''

ராஜீவ் மனத்துக்குள் புதைந்திருந்த சந்தேகம், சிக்கல் நிறைந்த விவகாரத்தில் தனது முதலாளி அகப்பட்டுக் கொள்ளாமல் இருக்க, அந்தக் கடிதத்தை உஷாவிடம் கொடுக்காமலே சுரேஷ் பொய் நாடகம் ஆடுகின்றானோ என்பதுதான். ஆபத்தான வினையிலிருந்து அவனைக் காப்பாற்ற வேண்டும் என்ற நல்ல எண்ணத்தோடேயே சுரேஷ் அப்படிச் செய்திருந்தால்?

உண்மையிலேயே உஷா விஷயத்தில் ராஜீவ் காண்பித்த பேராவல், சுரேஷுக்குச் சொல்லில் அடங்காத வியப்பைத் தந்தது. உலகில் நல்லதில் நம்பிக்கை அற்றவனும், பெண்களைக் கைப்பாவைகளாகக் கருதிப் பயன்படுத்தி வந்த அதே ராஜீவ், இப்போது முதல் முதலாகக் காதல் கணையால் தாக்கப்பட்ட இளம் கல்லூரி மாணவனைப் போல நடந்து கொள்வதை சுரேஷால் ஜீரணித்துக் கொள்ள முடியவில்லை.

சுரேஷுக்கு மிகவும் கவலையாக இருந்தது. இதெல்லாம் எங்கே போய் முடியுமோ? ஆழ்ந்த முன் யோசனை யின்றி ஒரு அடிகூட எடுத்து வைக்காத ராஜீவுடைய போக்கில் இந்தத் திடீர் மாற்றம் எதனால் ஏற்பட்டு விட்டது? உஷாவைப் பார்த்தால் ஒன்றுமே தெரியாத அப்பாவிப் பெண் என்று சுரேஷுக்குத் தோன்றியது. நல்ல குடும்பப்பெண் போலவும் தெரிந்தாள். என்றைக்கும் இல்லாமல் தனது முதலாளி நெருப்போடு விளையாட முற்பட்டு விட்டதை எண்ணி சுரேஷ் மிகுந்த வருத்தத்துக்கு உள்ளானான். இத்தனை ஆண்டுகளாக அரும் பாடுபட்டு அமைத்த மாபெரும் ராஜாங்கம், கேவலம் ஒரு சிறிய பெண் மூலம் சிதறி உருத் தெரியாமல் நாசமாகிவிடக் கூடிய நிலைமை ஏற்பட ராஜீவ் இடம் அளித்து விட்டாரே!

என்ன இருந்தாலும் சுரேஷ் ராஜீவிடம் கை நீட்டி ஊதியம் பெறுபவன். அவனோடு என்னதான் நெருங்கிப் பழகினாலும், அவனுக்கும் ஓர் எல்லை இருந்தது. அதை மீறி, அவனால் ராஜீவுக்கு உபதேசம் கூறும் அளவுக்குத் தைரியத்தை வரவழைத்துக் கொள்ள முடியவில்லை. ராஜீவ் எல்லோரையும் அப்படித்தான் வைத்திருந்தான். எவ்வளவு நெருங்கியவர்களாக இருந்தாலும் சரி, ஓரளவுக்கு மேல் ராஜீவிடம் சுவாதீனம் கொண்டாடப் பயப்படுவார்கள். எப்போதும் அவன் கொஞ்சம் விலகியே நிற்பான்.

சுரேஷ் மனத்தில் உள்ள அச்சம், கவலை, வருத்தம் எல்லாவற்றையும் ராஜீவால் உணர முடிந்தது. உண்மையில் தன் போக்கு அவனுக்கே புரியாத புதிராக இருந்தது.

கல்லூரி அரங்கத்தில் அந்தக் கடிதத்தை உஷாவுக்குக் கொடுத்து அனுப்பலாமா, வேண்டாமா என்பதைக் குறித்து மனத்துக்குள் நூறு முறை விவாதித்துக் கொண்டிருந்தான். கடைசி நேரத்தில் அதை எழுதி அனுப்பாமல் இருக்க முடியவில்லை.

---

அடுத்த இதழில்:

# கராத்தே கற்கலாம்

## கராத்தே மணி நடத்தும் கராத்தே வகுப்புக்கள்

சரி — ஆனது ஆகிவிட்டது. இனி அதைப் பற்றிக் கவலைப்பட்டு என்ன பயன்?

உஷா ஏன் இன்னும் ஃபோன் செய்யவில்லை? அவளுக்கு ஒருவேளை இதில் விருப்பம் இல்லையோ என்னவோ? சரி, அதனால் நஷ்டம் ஒன்றும் இல்லை. அவன்தான் முன்னெச்சரிக்கையோடு அந்தக் கடிதத்தின் கீழ் தனது பெயரை எழுதவில்லையே. வேறு யாராவது அதைப் படித்தாலும் ராஜீவ்தான் அதை எழுதினான் என்பதைக் கண்டு கொள்ள என்ன ஆதாரம் இருந்தது? ஒன்றுமே இல்லை. ஆனால் அந்த டெலிபோன் நம்பர்? அதற்கு போன் செய்து துப்பறிய வேறு யாராவது முயற்சி செய்தால்? பரவாயில்லை. இன்றே டெலிபோன் டிபார்ட்மெண்டுக்கு விண்ணப்பம் செய்து அந்த நம்பரை மாற்றி விடும்படி கேட்டால் போயிற்று!

ஆனால் உஷா ஏன் இன்னும் ஃபோன் செய்யவில்லை? மீண்டும் மீண்டும் அதே கேள்வி அவனை உறுத்திக் கொண்டிருந்தது. அப்படியானால், அன்று அவள் விழிகளில் அவன் பார்த்திருந்த தீவிர மோகம், உண்மை இல்லையா? எல்லாம் அவனுடைய முட்டாள்தனமான கற்பனையா? அவன் எழுதிய கடிதத்தைத் தனது தோழியரிடம் காட்டி அவனைப் பரிகாசம் செய்து சிரித்துக் கொண்டிருப்பாளோ என்னவோ? ஆனால்... ஆனால்.... உஷா அப்படிப்பட்டவளாக இருப்பாள் என்று தோன்றவில்லையே! பின் ஏன் இன்னும் அவனுக்கு ஃபோன் செய்யவில்லை?

திடீரென்று ராஜீவுடைய படுக்கை அறையில் ஃபோன் மணி அடித்தது. இரண்டாம் முறை மணியை ஒலிக்க விடாமல் அவ்வளவு ஆதங்கத்தோடு பாய்ந்து ரிஸீவரை அவசரமாக எடுத்தான்.

''ஹல்லோ... ஹல்லோ...''

''......''

''ஹல்லோ?'' என்றான் ராஜீவ் மீண்டும், ஆவலுடன். பிறகு, மறுமுனையில் யாரோ மூச்சுத் திணறுவது போல் ஒரு சத்தம் கேட்டது. தயக்கத்துடன் ஒரு மெல்லிய; இனிய குரல், மிகவும் தாழ்ந்த ஓசையுடன் பேசியது.

''ஹலோ... நான்தான் பேசறேன்.''

பெயரைக் குறிப்பிடா விட்டாலும் பேசியது உஷா தான் என்று ராஜீவுக்கு உடனே புரிந்தது. ஓர் அசட்டுத்தனமான சந்தோஷம் அவன் மனத்தில் தோன்றிற்று. தாள முடியாத மகிழ்ச்சியில் அவன் உடல் முழுதுமே துடித்தது. உஷாவுக்கு அவன் மீது ஆசை இல்லாமல் இல்லை. ஃபோன் செய்து விட்டாளே!



''உஷா?''

''நான்தான்.''

''எங்கிருந்து பேசறே?''

''காலேஜ்லே ஒரு டெலிபோன் பூத் இருக்கு. அதிலிருந்து பேசறேன்.'' உஷா மிகவும் தாழ்ந்த குரலில் பேசியதால், அவள் கூறும் வார்த்தைகளைச் சரியாகப் புரிந்து கொள்ள ராஜீவுக்குச் சற்றுச் சிரமமாக இருந்தது. தனது கைக் கடிகாரத்தைப் பார்த்தான். காலை 7.30 மணி ஆகியிருந்தது. ராஜீவுக்கு இது சற்று விசித்திரமாகப் பட்டது.

## நட்சத்திர வடிவம் பரிசுத் திட்டம் - 9

சீமாவின் முழு உருவத்தையும் சரியாகப்படி ஒட்டி அனுப்பியவர் மூவர் மட்டுமே.

(1) ஏ. அன்வை அமுதன், பஸ் ஸ்டாண்டு சமீபம், பூஞ்சோலை காம்பவுண்டு, வடக்கன் குளம் போஸ்டு, திருநெல்வேலி மா. வ. (2) ஸ்ரீமதி விஜயலக்ஷ்மி நாராயணன், சி-67, பிர்லா நகர், போர்பந்தர், 360576 குஜராத். (3) அ. வெ. நவநீதகிருஷ்ணன், 13, தேசிக விநாயகர் கோவில் தெரு, வல்லம் அஞ்சல், 613403, தஞ்சை மா. வ.

மிஞ்சும் தொகை: ரூ. 175.

ஜாக்பாட்டுக்கு (11வது போட்டி) சேர்ந்துள்ள தொகை ரூ. 1700.

ஜாக்பாட்டுக்குச் சேர்ந்துள்ள புகைப் படங்கள் 68.

புகைப்படம்: மோனலிஸா

## போட்டி முடிவு

''இவ்வளவு சீக்கிரம் காலேஜுக்கு வந்துட்டியா?'' என்று ஆச்சரியத்துடன் கேட்டான்.

''நான் இங்கேதானே தங்கறேன் — காலேஜ் ஹாஸ்டல்லே'' என்று விளக்கினாள் உஷா.

''ஓ!'' ராஜீவ் இதை யூகித்து இருக்கவில்லை.

''ஏன்? மெட்ராஸ்லே வீடு இல்லையா? உங்க ஊர் எது?'' என்று விசாரித்தான்.

''ஸ்ரீரங்கம்.''

''ஐ ஸீ. உங்க அப்பா அம்மா அங்கே இருக்காங்களா?''

''அப்பா இல்லே. அம்மா மட்டும் இருக்காங்க. நான் குழந்தையா இருக்கும் போதே அப்பா இறந்து போயிட்டார்'' என்றாள் உஷா.

''ஓ! ஐ ஆம் ஸாரி.''

உஷா லேசாகச் சிரித்தாள். ''தட்ஸ் ஆல்ரைட். நீங்க எதுக்காக ஸாரி சொல்ல

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆



◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

ணும்? எங்க அப்பா இறந்து போனதைப் பத்தி உங்களுக்கு எப்படித் தெரிஞ்சிருக்க முடியும்?''

''உஷா!''

''உம்?''

''என் கடிதத்தைப் படிச்சதும் என்ன நினைச்சே?'' என்று கேட்டான் ராஜீவ், ஆவலுடன்.

''முதல்லே என்னாலே நம்பவே முடியலே'' என்றாள் உஷா.

''எதை நம்ப முடியலே?''

''அந்தக் கடிதத்தை நீங்கதான் எழுதி அனுப்பினீங்கங்கிறதை.''

''அப்புறம் எப்படி நம்பிக்கை வந்தது?''

''உங்க செக்ரட்டரி மிஸ்டர் சுரேஷ் தானே அதை எங்கிட்டக் கொடுத்தார்? அதனாலே நீங்கதான் எழுதியிருக்கணும்னு புரிஞ்சுக்கிட்டேன்.''

''ஏன் உஷா ரெண்டு நாளா ஃபோன் பண்ணலே?''

''பயமா இருந்தது.''

''எதுக்குப் பயம்?''

''தெரியலே!'' என்றாள் உஷா குழம்பியவாறு.

ராஜீவ் சிரித்தான்:

''இப்போ எப்படித் தைரியம் வந்தது?'' என்று கேட்டான்.

''தெரியலே. ஃபோன் பண்ணுமே இதுக்கு மேலே என்னுல இருக்க முடியலே'' என்றாள் உஷா நாணத்தோடு. அவள் வார்த்தைகள் ராஜீவின் உள்ளத்தில் புதிய குதூகலத்தைப் பிறப்பித்தன.

''உஷா! ரெண்டு நாளா உன் ஃபோன் காலுக்காக எப்படி ஏங்கித் தவம் கிடந்தேன்னு உனக்குத் தெரியுமா?'' என்றான்.

இதைக் கேட்டதும் உஷாவின் உள்ளம் பூரித்துப் போய் விட்டது.

''நிஜமாச் சொல்றீங்களா?'' என்று கேட்டாள்.

''சத்தியமா! ஃபோன் எப்போ அடிக்கும்னு அதன் பக்கத்திலேயே உட்கார்ந்துகிட்டு இருந்தேன். நான் அந்தண்டை இந்தண்டை நகரலே!''

உஷா சிரித்தாள். ''சும்மா சொல்றீங்க!''

''இல்லே, உஷா. ஐ மீன் இட்!''

''நீங்க சொன்னுச் சரி.''

''உஷா!'' அவன் குரலில் ஒரு திடீர் வேகம் தோன்றியது.

''யெஸ்?''

''உஷா... நான் உன்னைத்...தனியா... பார்க்கணும்... சந்திக்கப் பேசணும்!'' என்றான் ராஜீவ் ஆர்வம் மிக்க குரலில்.

உஷாவிடமிருந்து பதில் எதுவும் வரவில்லை.

''உஷா! உஷா!''

இன்னும் மறு முனையில் மௌனம் நீடித்தது. ''சே! நான் ஒரு மடையன்! அவசரப்பட்டுப் பயமுறுத்தி விரட்டி விட்டேனு?'' என்று தன்னைத் தானே கோபித்துக் கொண்டான்.

உஷா அவனுக்குத் தெரிந்த மற்ற பெண்களைப்போல் இல்லை. இவள் அனுபவம் இல்லாதவள். இது தானுகக் கனிய வேண்டிய மலர். நாசுக்காகக் கையாள வேண்டிய இளம் மொட்டு. பொறுமையை இழந்து அவளை அச்சுறுத்தித் துரத்தி விட்டேனு?

''உஷா...உஷா!''

ஏன் அவள் பேச மறுத்தாள்?

(தொடரும்)




குதிரையில் ஆரோகணித்து வரும் மாப்பிள்ளையின் ஊர்வலத்தில் கலந்து கொள்ள நபர்கள் ராஜஸ்தானில் வாடகைக்குக் கிடைக்கின்றனர். நெடுந்தொலைவிலிருந்து கல்யாணம் நடத்தும் பெண் வீட்டுக்கு வரும் மாப்பிள்ளை வீட்டாருக்கு இதனால் வசதி. கல்யாணம் நடத்துபவர்களின் தகுதிக் கேற்ப வாடகை உயரும், குறையும். குறைந்த பட்ச வாடகை நபர் ஒன்றுக்கு மூன்று ரூபாய். -பூராம்பூர் மணி

அடுத்த இதழில்

செம்பியன்

எழுதும்

அழகிய நாவல்



f. லாபமும், டிவிடெண்டும்:

| 31, டிசம்பருடன் முடிந்த ஆண்டு | லாபம் வரிகளுக்கு ஒதுக்கு முன் | லாபம் வரிகளுக்கு ஒதுக்கிய பின் | வழங்கப்பட்ட டிவிடெண்ட் | டிவிடெண்டு சதவிகிதம் |
|---|---|---|---|---|
| 1979 | 1334.00 | 884.00 | 280.50 | 17* |
| 1978 | 1527.94 | 690.94 | 224.31 | 16** |
| 1977 | 1277.00 | 537.00 | 168.23 | 15 |

* இவ்வாண்டில் பப்ளிக் இஷ்யூ மூலம் விரிவாக்கப்பட்ட மூலதனத்திலிருந்து
** இவ்வாண்டில் போனஸ் பங்குகள் மூலம் விரிவாக்கப்பட்ட மூலதனத்திலிருந்து

டிபாஸிட்டுகளின் மூலம் பெறப்பட்ட தொகை கம்பெனியின் நடப்பு பணிகளுக்குப் பயன்படுத்தப்படும். இவ்விளம்பரத்தின் வாசகம் 24-6-1980 அன்று டைரக்டர் போர்டினால் அங்கீகரிக்கப்பட்டது. இதன் நகல் ஒன்று கம்பெனி டைரக்டர்களில் பெரும்பான்மையினரால் கையொப்பமிடப்பட்டு பதிவுக்காக தமிழ்நாடு கம்பெனி ரிஜிஸ்திராரிடம் கொடுக்கப்பட்டுள்ளது.

போர்டின் உத்தரவுப்படி அசோக்லேலண்டு லிமிடெட்டுக்காக

**(எஸ். சங்கரநாராயணன்)**

எக்ஸிக்யூடிவ் டைரக்டர், & செயலாளர்

சென்னை

ஏற்பட்ட ரிசர்விலிருந்தும் 25 சதவிகிதம் — ரூ. 998 லட்சங்கள்

ii. வைப்புதாரர்களிடமிருந்து பங்குதாரர்களிடமிருந்து, செலுத்தப்பட்ட மூலதனத்திலிருந்தும் ஏற்பட்ட ரிசர்விலிருந்தும் 10 சதவிகிதம் — ரூ. 399 லட்சங்கள்

ரூ. 1397 லட்சங்கள்

தற்சமயம் டிபாஸிட்டுகளை ஏற்றுக் கொள்வதற்காக 1972ம் வருடத்திய அந்நிய செலாவணி ஒழுங்குமுறைச் சட்டம் பிரிவு 25(7) (ii)-ன்படி ரூ. 998 லட்சம் வரை ஏற்றுக் கொள்ளலாம்.

b விதிகளின்படி 31-12-79 வரையில் உள்ள டிபாஸிட்டுகளின் மொத்தம்—ஒன்றுமில்லை.

i. இவ்விளம்பரம் வெளியாகும் நாள்வரை காலங்கடந்த டிபாஸிட் எதுவும் கம்பெனியிடம் இல்லை.

j. கம்பெனி இதன்மூலம் உறுதி கூறுவதாவது:

i. 1975ம் வருட கம்பெனிகள் (டிபாஸிட் ஏற்பு) திருத்தப்பட்ட விதிகளைக் கம்பெனி பின்பற்றியுள்ளது.

ii. இவ்விதிகள் பின்பற்றப்பட்டிருப்பதால் டிபாஸிட்டுகளைத் திருப்பிக்கொடுக்க மத்திய அரசு உத்தரவாதம் அளித்திருப்பதாகக் கருதலாகாது.

iii. கம்பெனிகள் ஏற்கும் டிபாஸிட்டுகள் கடுபெறுதலை, மற்றும் கடுபெறாத மற்றைய கடன்களுக்குச் சமமாகவே பாவிக்கப்படும்.

ஃபிக்ஸெட் டிபாஸிட்டிற்கு விண்ணப்பிக்கும் முறை

டிபாஸிட்டிற்கான சட்ட திட்டங்கள் மற்றும் விண்ணப்பத் தாள்கள் மேற்கண்ட முகவரியில் கிடைக்கின்றன. நிறைவுசெய்யப்பட்ட விண்ணப்பத் தாள்களையும் பணத்தையும் இதே முகவரிக்கு அனுப்ப வேண்டும்.

ஃபிக்ஸட் டிபாஸிட்டிற்கான விண்ணப்பத் தாளைச் சமர்ப்பிக்கும் நகரங்களிலுள்ள ஷெட்யூல் பாங்கின் மூலம்தான் கிராஸ் செய்யப்பட்ட அக்கவுண்ட் பேயீ செக்குகளையோ அல்லது டிராப்டுகளையோ அளித்தல் வேண்டும். கிராஸ்டு அக்கவுண்ட் பேயீ செக்குகள் அல்லது டிராப்டுகள் அசோக் லேலண்ட் லிமிடெட் பிக்ஸட் டெபாஸிட் கணக்கு என்ற பெயரில் அளிக்கப்பட வேண்டும்.

1. கம்பெனியின் அலுவலகங்கள்

| பதிவுசெய்யப்பட்ட அலுவலகம்: | பிராந்திய அலுவலகம்:- | கல்கத்தா: |
|---|---|---|
| எண்ணூர்: | சென்னை: | 'சாந்தி நிகேதன்' |
| சென்னை 600057. | 733, மவுண்ட் ரோடு, | 84, எட்டாவது மாடி, |
| தொலை பேசி எண்: 555041 | சென்னை-600006. | 8, காமக் வீதி, கல்கத்தா |
| (10 தொடர்புகள்) | தொலை பேசி: 89585 | 700012, தொலை பேசி: |
| | | எண்: 43-2592, 44-5029 |
| நகர அலுவலகம்: | பம்பாய்: | புதுதில்லி: |
| 'டவர் ஹவுஸ்', | 'எலக்ட்ரிக் மான்ஷன்' | 'தேஜ் பில்டிங்' |
| 28, இராஜாஜி சாலை, | அப்பா சாஹிப் மராடே | 8-பி, பகதூர்ஷா ஜபர் |
| சென்னை 600001. | மார்க், பிரபா தேவி, | மார்க், புது தில்லி-110002. |
| தொலை பேசி எண்: 24674. | பம்பாய்-400025. தொலை பேசி: 453493, 455076. | தொலை பேசி: 275219, 275297. |

(3) கனரா வங்கியின் முக்கிய கிளைகளில்:
பம்பாய், கல்கத்தா, சென்னை, புதுதில்லி, அகமதாபாத், பரோடா, கோவா, பூனா, சூரத், கான்பூர், பெங்களூர், கொச்சி, கோயமுத்தூர், ஹைதராபாத்

பணம் வழங்கல்: அந்தந்த உரிய தேதிகளில் அளிக்கப்பட வேண்டிய வட்டியும், முதலும் சம மதிப்பில் இந்தியாவில் உள்ள கனரா வங்கி கிளைகள் அனைத்திலிருந்தும் பெற்றுக் கொள்ளலாம்.

2. ஃபிக்ஸட் டிபாஸிட்டிற்கான நிர்வாகிகள்

| சம்பக்லால் இன்வெஸ்ட்மெண்ட் & பைனான்ஷியல் கன்ஸல்டன்ட்ஸ் லிமிடெட். | DSP பைனான்ஷியல் கன்ஸல்டன்ட்ஸ் லிமிடெட். | JM பைனான்ஷியல் இன்வெஸ்ட்மெண்ட் கன்ஸல்டன்ஸி சர்வீஸஸ் பி.லிமிடெட். |
|---|---|---|
| பம்பாய்: | டெபாஸிட் டிபார்ட்மெண்ட், | 112, நாரிமேன் பவன் |
| பூபன் சேம்பர்ஸ் | 64, ஸ்டாக் எக்ஸேஞ்ச் பில்டிங், | 2, நாரிமன் பாயிண்ட், |
| தலால் ஸ்ட்ரீட் | 3 வது மாடி அபல்லோ ஸ்ட்ரீட், | பம்பாய்-400021. |
| பம்பாய்-400023 | பம்பாய்-400023 | தொலை பேசி: |
| தொலை பேசி: | தொலைபேசி: 272479, | 233594, 233426. |
| 272418, 270849 | 272660 | |

மற்றும் கல்கத்தா, சென்னை, புதுதில்லி, அகமதாபாத், பரோடா, கோவா, பூனா, சூரத், கான்பூர், பெங்களூர், கொச்சி, கோயமுத்தூர், ஹைதராபாத்திலுள்ள அவர்களுடைய அலுவலகங்களில்.

'அசோக் லேலண்ட்'

மிகப் பிரசித்திப் பெற்ற பெயர்

# பதவியில் உயரப் பரிவுடன் உதவி!



பி. முத்துஸ்வாமி

'ஸ்வாமி பப்ளிஷர்ஸ்' என்ற பெயர் இப்பொழுது இந்தியா பூராவிலும் அரசாங்க அலுவலகங்களில் நன்கு பரிச்சயமான பெயர். எந்த ஒரு செயலும் அரசாங்க சட்ட திட்டப்படி சரியா என அறிய வேண்டுமானால் எல்லோரும் நம்பிக்கையுடன் புரட்டிப் பார்ப்பது ஸ்வாமி பப்ளிஷர்ஸ் வெளியிட்டுள்ள நூல்களைத்தான்.

திரு பி. முத்துஸ்வாமி அஞ்சலகத்தில் எழுத்தராகத் தம் வாழ்க்கையைத் துவக்கினார். அப்பொழுது ஒவ்வொரு ஆண்டும் பல இளைஞர்கள் இந்த வேலைத் தேர்வுக்குப் போட்டியிடுகிறார்களே, அவர்களுக்கு வழி காட்டி நூலாக ஒன்றை வெளியிட்டால் என்ன என்ற எண்ணம் தோன்றியது. அதற்காக அவர் புத்தகம் எழுதவும் செய்தார். பிரசுரிக்க மேலதிகாரிகளிடம் உத்தரவு பெற வேண்டும் என்ற எண்ணத்தில் போஸ்ட் மாஸ்டர் ஜெனரலுக்கு அனுப்பினார். கொஞ்சகாலத்தில் அது இவரிடமே திரும்பி வந்துவிட்டது — அனுமதி கிடைக்கவில்லை. திரு. முத்துஸ்வாமி தாமே பதவியில் உயர்ந்தால்தான் தம் எண்ணம் நிறைவேறும் என்று கண்டார். பல பரீட்சைகள் எழுதி வெற்றி பெற்றுப் பதவியில் உயர்ந்தார். டில்லிக்கு மாற்றப்பட்டார். அங்கு வேலை உயர்வுக்காகப் பரீட்சை எழுதும் மாணவர்களுக்குப் பாடம் கற்பிக்க ஆரம்பித்தார். 'சைக்ளோஸ்டைல்' செய்து படிப்பவர்களுக்குக் கொடுத்தார். இதுதான் அவர் முதலில் செய்த வெளியீடு. இதைப் படித்த மாணவர்கள் பெரும்பாலும் வெற்றி பெற்றனர். வேறு பலரும் இவரிடம் இந்த நோட்ஸ்களைக் கேட்டனர். எனவே ஊழியர் கூட்டுறவு கடன் வசதி சங்கத்திலிருந்து ரூ. 1500 கடன் வாங்கி, ஸ்வாமி பப்ளிஷர்ஸின் முதல் புத்தகத்தை வெளியிட்டார். அது அவ்வளவு வெற்றியைத் தரவில்லை. இருந்தாலும் தொடர்ந்து வெளியிட்ட புத்தகங்கள் பெருமளவு வெற்றி கண்டன.

அரசாங்கத்தில் பணிபுரியும் பல ஊழியர்களுக்கும் பரீட்சைகள் தேற இவை உதவியாக இருக்கின்றன. பதவி உயர்வு பெறத் துணை புரிகின்றன. 1979ம் ஆண்டில் இவருடைய புத்தகப் பிரதிகள் கிட்டத் தட்ட இரண்டு லட்சம் விற்றிருக்கின்றன!

முதலில் அனுமதி மறுத்த அரசு இயந்திரம் இன்று முழு ஒத்துழைப்புத் தருகிறது. மத்திய அரசும் எல்லா மாநில அரசாங்கங்களும் சட்டத்தின் எந்தப் புது அறிமுகத்தையும், திருத்தத்தையும் ஸ்வாமிக்கு உடனடியாக அனுப்பி வருகின்றன.

அண்மையில் ஸ்வாமி பப்ளிஷர்ஸ் நிறுவனம் வெள்ளி விழா கொண்டாடியது.

—குயிலி ராஜேஸ்வரி

அடி வயிற்றில் ஆவேசத்துடன் செருகப்பட்ட அந்த ஒன்பது அங்குலக் கத்தி கல்லீரலையும், மண்ணீரலையும் சிதைத்து மரணத்தை உண்டாக்கியிருக்கிறது. மரணம் இரவு எட்டு மணியிலிருந்து ஒன்பது மணிக்குள் நிகழ்ந்திருக்கலாம்.

போஸ்ட் மார்ட்டம் ரிப்போர்ட்டில் கண்களை ஓடவிட்டிருந்த இன்ஸ்பெக்டர் தன்ராஜ் ஒருமுறை அந்த மரணத்தின் கோரத் தன்மையை நினைத்துச் சிலிர்த்தார்.

இன்ஸ்பெக்டர் பதவி ஏற்ற இந்த ஆறு மாத காலத்தில் அவர் கையாளப் போகும் மூன்றாவது கொலைக் கேஸ் இது. முதலிரண்டு வழக்குகளில் குறிப்பிட்ட நபர்தான் குற்றவாளி என்பதற்கான அறிகுறிகள் — தக்க ருசுக்கள் கிடைத்ததன் பயன்.... வழக்குகளில் அலைச்சல் இல்லாமல் போய் ஹாய்யாகக் குற்றவாளிகளில் ஒருவனுக்கு மரண தண்டனையும், இன்னொருவனுக்கு ஆயுள் தண்டனையும் வாங்கித் தந்தார்.

இந்தக் கொலை வழக்கு அவரைக் கண்ணு மூச்சி ஆட வைத்தது. கொலையுண்ட முருகானந்தம் இருபத்தியேழு வயதான அழகான இளைஞன். கல்யாணமாகாதவன். நண்பர்கள் அதிகம் இல்லாதவன். வாரத்துக்கு ஒரு தடவை ஞாயிற்றுக் கிழமையன்றைக்கு பாலக்காடு பஸ் பிடித்து பாலக்காட்டின் தென்னந் தோப்புகளில் கள்ளைக் குடிக்க மட்டும் போகிறவன். அவனுடன் பழகும் ஒரு நண்பன் சத்தியனின் மேல் அபரிமிதமான பிரியம் கொண்டவன்.

சென்ற வார ஞாயிற்றுக் கிழமையன்று பாலக்காட்டில் ஒதுக்குப்புறமான தென்னந் தோப்பின் — வாய்க்கால் பக்கமாக அடிவயிற்றில் செருகப்பட்ட கத்தியோடு பிணமாகக் கிடந்த முருகானந்தம் இன்ஸ்பெக்டர் தன்ராஜின் பிரச்னையானான்.

யாரோடும் அதிகம் நெருங்கிப் பழகாத முருகானந்தத்துக்கு — கொலை செய்யும் அளவுக்கு விரோதிகள் எப்படி இருக்க முடியும்?

கேரளப் போலீஸ் இப்படி வாதித்தது. 'குடிக்க வந்த இடத்தில் ஏதேனும் சில்லறைத் தகராறு ஏற்பட்டு எவனாவது ஆத்திரத்தில் குத்தியிருக்கலாம். நாங்கள் புலன் விசாரணை செய்து ரிப்போர்ட் அனுப்புகிறோம்.'

ஆனால் இன்ஸ்பெக்டர் தன்ராஜின் மனத்தில் மட்டும் 'இது அப்படி நடந்திருக்கக்கூடிய கொலையல்ல' என்ற சந்தேகம் மெல்ல மெல்ல வியாபித்தது.

இது நிச்சயமாய்த் திட்டமிட்டுச் செய்த கொலைதான்! முருகானந்தத்தின் ஒரே நண்பன் சத்தியனை விசாரித்தால் ஏதேனும் தகவல் கிடைக்காதா? முருகானந்தத்திற்கு இருந்த ஒரே நண்பன் விரோதியாய் மாறியிருக்க முடியாதா என்ன?

ஒருவித நப்பாசையோடு சத்தியன் தங்கியிருந்த ராம்நகர் பகுதியை நோக்கித் தன் ஜாவாவைச் செலுத்தினார் தன்ராஜ்.

தனியார் நிறுவனம் ஒன்றில் கிளார்க்காக வேலை பார்க்கும் சத்தியன் ராம்நகர் காளிதாஸ் ரோட்டின் வளைவில் இருந்த ஒரு மாடியில் ஐம்பது ரூபாய் வாடகையில் அறையொன்றைப் பிடித்துத் தங்கியிருந்தான். தன்ராஜ் சென்ற சமயம் சத்தியன் நுரை பொங்கும் சோப்பு முகத்தோடு ஷேவிங்கில் இருந்தான். இன்ஸ்பெக்டரைக் கண்டதும் புன்னகை பூத்தான்.

"ஹலோ இன்ஸ்பெக்டர் ப்ளீஸ் கம் இன்..."

தன்ராஜ் உள்ளே நுழைந்தார். சத்தியன் ஒரு மடக்கு நாற்காலியை விரித்துப் போட்டான்.

"நீங்க ஷேவிங்கை முடிச்சுட்டு வாங்க மிஸ்டர் சத்தியன்" — பேசிக் கொண்டே நாற்காலியில் சாய்ந்தார் தன்ராஜ்.

சத்தியன் பரபரவென்று ஷேவிங்கை முடித்துக்கொண்டு முகம் கழுவித் தேங்காய்ப்பூ துவாலையில் முகத்தை ஒற்றிக் கொண்டே வந்தான்.

"எனி க்ளூஸ்... இன்ஸ்பெக்டர்?"






ராஜேஷ் குமார்

''நோ'' என்றார் தன்ராஜ். பிறகு சிகரெட் ஒன்றை உதட்டில் பொருத்திக் கொண்டே சத்தியனைப் பார்த்தபடி சொன்னார்: ''மிஸ்டர் சத்தியன்! உங்க நண்பர் முருகானந்தத்தைப் பற்றி வேறு ஏதாவது தகவல் உங்களுக்குத் தெரிஞ்சிருந்தா மறைக்காமல் சொல்லுங்களேன். இந்தக் கேஸை ஈஸியா உடைச்சுடலாம்... என்று அவருக்கு இருந்த ஒரே நண்பர் நீங்கதான்....''

''வாஸ்தவம்தான் இன்ஸ்பெக்டர்... பட் அவனைப் பற்றிப் புதுசாச் சொல்ல ஒண்ணுமே இல்லே; அன்னிக்கு நான் உங்ககிட்ட சொன்னதையே தான் இன்னிக்கும் சொல்லணும். அவன் குடிப்பான்... ஆனா பெண்கள் சகவாசம் இல்லே.... விரோதின்னு சொல்ல ஒரு ஈ, எறும்பு கூட இல்லே...''

தன்ராஜ் புகையை உதடுகளில் வழிய விட்டார். பிறகு கேட்டார்: ''போன ஞாயிற்றுக் கிழமை நீங்க முருகானந்தத்தைப் பார்க்கவேயில்லையா?''

''இல்லே இன்ஸ்பெக்டர்... நிச்சயமா நான் அவனைப் பார்க்கல்லே. அன்னிக்கு எனக்கு வயிறு சரியில்லே. டிஸண்ட்ரி மாதிரி இருந்தது. காலையிலிருந்து எங்கேயும் போகாமல் ரூமுக்குள்ளேயே படுத்திருந்தேன். கீழே குடியிருக்கிற வீட்டுக்கார அம்மாள் வெந்நீர் வெச்சு அப்பப்பக் குடுத்துக்கிட்டிருந்தாங்க. உங்களுக்கு டவுட் இருந்தா ப்ளீஸ் ஆஸ்க் தெம்....''

''நோ.... நோ.... மிஸ்டர் சத்தியன்.. உங்கமேலே எனக்கு டவுட்ஸ் ஏதும் இல்லே.''

''தேங்க்யூ இன்ஸ்பெக்டர்'' என்றவன் கொஞ்சம் பவ்யமாய் ''வில் யூ ஹேவ் எனி ட்ரிங்க்ஸ் இன்ஸ்பெக்டர்?'' என்றான்.

சிகரெட்டைக் கீழே போட்டு பூட்ஸ் காலால் நசுக்கியபடியே ''டீ'' என்றார் தன்ராஜ்.

''ஒன் மினிட் இன்ஸ்பெக்டர்... எதிரில் இருக்கும் ஹோட்டலில் சொல்லிட்டு வந்துடறேன்...'' சத்தியன் சட்டையை மாட்டிக் கொண்டு வெளியேறினான்.

தன்ராஜுக்குக் குழப்பம் தலையை முழுக்கக் கவ்வியது. இந்தக் கொலை வழக்கின் முடிச்சு இறுகியது இறுகியபடியே இருப்பதை எண்ணி மனத்தில் ஆயாசம் பொங்க விழிகளைச் சுழற்றினார். அலமாரியின் மேல் தட்டிலிருந்த அந்தப் பத்திரிகையின் அட்டைப் படம் அவர் கண்களை உறுத்தியது.

எழுந்து அந்தப் பத்திரிகையை எடுத்தார். அது ஒரு தமிழ் வார இதழ். தேதியைப் பார்த்தார். போன வாரத்திய இதழ்.

பக்கங்களைத் திருப்பத் தொடங்கினார். துணுக்குகளை மட்டும் மேய்ந்துவிட்டு சினிமா விமர்சனம் ஒன்றைப் படித்துவிட்டு மளமளவென்று பக்கங்களைப் புரட்டிவிட்டுப் புத்தகத்தைக் கவிழ்த்து வைத்தார்.



மின்னல் மின்னுகிறதே அது எவ்வளவு நீளம் இருக்கும்? ஒரு மைல் முதல் பத்து மைல் நீளம் வரை கூட இருக்கும்.
- பிரியா பாலு

அந்த இதழின் பின்புற அட்டை இப்போது கண்ணில் பட்டது. அதை அசட்டையாகப் பார்த்தவர் சட்டென்று நிமிர்ந்து உட்கார்ந்தார். உடம்பெல்லாம் அந்தப் பரபரப்பு மோத ஆரம்பித்தது. பின்புற அட்டையின் வலது பக்கமாய் விழிகள் நிலைத்து நின்றது.

அதே விநாடி....

சத்தியன் மாடிப் படிகளில் ஏறி வரும் சத்தம் கேட்டது. அந்த வார இதழைக் கையில் எடுத்துக் கொண்டார் தன்ராஜ்.

சத்தியனே இரண்டு கண்ணாடி டம்ளர்களில் டீயை எடுத்துக் கொண்டு உள்ளே நுழைந்தான். முகத்தில் லேசாய் வியர்வை.

''என்ன மிஸ்டர் சத்தியன்!... நீங்களே வாங்கிக் கொண்டு வந்திட்டீங்களா? என்னால் உங்களுக்குச் சிரமம்...''

''இதிலென்ன சார் சிரமம்... ப்ளீஸ் ஹேவ் இட்....''

''தேங்க்யூ'' — டீயை எடுத்துக் கொண்டார் தன்ராஜ். ஒரு வாய் டீயை உறிஞ்சிய படியே கேட்டார்: ''இந்த வார இதழ் உங்களுடையதா மிஸ்டர் சத்தியன்?''

''ஆமாம் இன்ஸ்பெக்டர்... ஏன்?''

''இல்லே இந்த வார இதழ்லே பிராஸ்ட்டிட்யூஷனைப்பற்றி ஓர் அருமையான ஆர்ட்டிகிள் போட்டிருக்கான். வீட்டுக்கு எடுத்துட்டுப் போய்ப் படிச்சுட்டுத் தரலான்னு நினைச்சேன். புத்தகம் உங்களுடையதா இருந்தா கொஞ்சம் சாவகாசமாகத் தரலாமேன்னு தான் கேட்டேன்.''

''வித் ப்ளஷர் இன்ஸ்பெக்டர்... இந்தப் புத்தகத்தை நீங்களே வேணுமின்னாலும் வெச்சுக்குங்க... என்னோடதுதான்.''

உற்சாகமாய்ச் சொன்னான் சத்தியன்.

''தேங்க்யூ... பை... த... பை... சத்தியன் எனக்கு ஒரு விஷயம் தெரிஞ்சாகணுமே...''

''கேளுங்க ஸார்...''

''இந்த வார இதழை எந்தக் கடையில வாங்கினீங்கன்னு சொல்ல முடியுமா மிஸ்டர் சத்தியன்!''

ஒரு கணம் முகம் இருண்டான் சத்தியன். அடுத்த கணமே ''ஏன் நம்ம ஊர் சென்ட்ரல் பஸ் ஸ்டாண்டிலதான் வாங்கினேன்'' என்றான்.

தன்ராஜ் பாதி டீ டம்ளரை வைத்துவிட்டு எழுந்தார். குரலைச் சற்று உயர்த்திக்கொண்டார். ''நிச்சயமா இந்த வார இதழை நீங்க நம்ம ஊர் சென்ட்ரல் பஸ் ஸ்டாண்டில வாங்கல்ல. பாலக்காடு பஸ் ஸ்டாண்டிலே வாங்கியிருக்கீங்க... ஸீ தி பேக் பேஜ் ஆப் திஸ் வீக்லி...''

சத்தியன் வியர்த்துப் போய் எழுந்து அந்த வார இதழின் பின்பக்க அட்டையைப் பார்த்தான். அவனுக்கு இதயத்தை அடைத்தது. இதை எப்படிக் கவனிக்காமல் விட்டோம்?

அந்த வார இதழின் பின் பக்க அட்டையில் — அழகான ரப்பர் ஸ்டாம்ப்

முத்திரையில் — அந்த எழுத்துக்கள் தெரிந்தன:

ஸ்ரீ ராமன் நாயர் புக் ஸ்டால்

பாலக்காடு பஸ் ஸ்டாண்ட் — பாலக்காடு.

எல்லாவிதத் தமிழ் புத்தகங்களும் கிடைக்கும் ஒரே கடை.

தன்ராஜ் சத்தியனைக் கூர்மையாகப் பார்த்துக்கொண்டே சொன்னார்: ''போன வாரம் ஞாயிற்றுக் கிழமை நீங்கள் பாலக்காடு போயிருக்கீங்க. சாயந்தரம் ஆறு மணிவரை உங்க ரூம்லே இருந்துட்டு கீழே இருக்கிற வீட்டுக்காரங்க சினிமாவுக்குப் போனப்புறம் நீங்க பாலக்காடு போயிருக்கீங்க. முருகானந்தத்தைத் தீர்த்துக் கட்டிட்டு ஒன்பது மணிக்குள்ளாறத் திரும்பியிருக்கீங்க. உங்க ஃபிரண்டை எதுக்காகக் கொலை செஞ்சீங்கங்கிறதை இனிமே உங்க வாயிலிருந்து வரவழைக்கிறது எங்களுக்கு ரொம்பவும் சுலபம். ஸ்டேஷன் வரை ஒரு நடை வந்துட்டுப் போறீங்களா மிஸ்டர் சத்தியன்?''

சத்தியன் திகைத்துப் போய் நின்றான்.

வாங்கின கடனை நாலு பேர் எதிரே இருக்கையில் அநாகரிகமாய் — அடாவடித்தனமாய்க் கேட்டு — முருகானந்தம் தன்னை அவமானப்படுத்தினான் என்பதற்காக — கள் குடிக்கப் போன அவனைப் பாலக்காடு தென்னந் தோப்பில் சூரிக் கத்தியால் கிழித்துப் போட்டுவிட்டு பஸ் ஏற பாலக்காடு பஸ் ஸ்டாண்டுக்கு வருகையில் எதிர்ப்பட்ட நண்பர் ஒருவரின் கண்களில் பட்டுவிடக் கூடாது என்பதற்காக அந்தப் புத்தகக் கடையில் நுழைந்து ஏதோ ஒரு வார இதழை வாங்கப் போக.... அந்த வார இதழே அவனுக்கு ஒரு வலையாய் அமையுமென்று சத்தியன் கொஞ்சமும் எதிர்பார்க்கவில்லை.

பொன்னகரம்

பொன்னகரம் பஞ்சாயத்து, பட்டணத்திலிருந்து கிராமத்துக்குக் குடியேறும் ராஜாவையும் டாக்டர் லக்ஷ்மியையும் பகிஷ்கரிக்கிறது. ஊரே அவர்களை ஒதுக்கி வைத்துப் பாடாய்ப் படுத்துகிறது. பொன் நகரம் அவர்களைப் பொறுத்த வரையில் பொன்நரகம் தான்! மனம் வெதும்பி வெளியேறும் ராஜா—லக்ஷ்மி இருவரையும் பொன்னகர கிராம மக்கள் மனம் திருந்தி ஏற்பது திருப்பம். அணையப் போகும் விளக்கு சுடர்விட்டுப் பிரகாசிப்பது போல, ஊர்வசி ஷோபா மறைவதற்குமுன் சுடர்விட்டு நடித்த படங்களில் ஒன்று பொன்னகரம்.

ராஜாவாகத் தோன்றும் சரத்பாபு புளியம்பட்டி ஜமீன்தாராகவும் வருகிறார். ஆனால் அது வெறும் வேஷம் என்று அப்பட்டமாக எல்லோருக்கும் தெரிகிறது.

பவானியின் தந்தை வேதாசலத்துக்குத் தெரியாமலிருந்தது அதிசயம்தான்!

''இருப்பவர்க்கு ஒரு வீடு, இல்லாதவர்க்குப் பல வீடு'' என்று ஜேசுதாஸின் உருக்கமான குரலில் ஒலிக்கிறது காமகோடியின் கருத்துள்ள பாடல்.

பொன்னகரத்துக் கிராம மக்களை அதிமுட்டாளாக்குகிறது,

கருணிராஜன் — சக்கவின் ''டூப்'' காதல்!

கதை, வசனம், டைரக்ஷன் பொறுப்புக்களை ஏற்றிருப்பவர் கே. எஸ். மாதங்கன். ஓவர்லோட்! மறைந்த நட்சத்திரம் ஷோபா மீதுள்ள பரிவைப் பணமாக்குகிறார்கள்.

பி. எஸ். எம்.



# சபலம்

## ஜெயவண்ணன்

**ப**ன்னீருக்கு அப்படி ஓர் ஆசை வந்திருக்க வேண்டியதில்லை.

அன்றைக்கு மானேஜர் லீவு.

மணி ஐந்து அடித்ததும் எல்லோரும் அலுவலகத்தை விட்டுப் போய் விட்டனர். காஷியர் இருந்து அலுவலகத்தைப் பூட்டிக் கொண்டு போக வேண்டும்.

மனுஷன் அப்படியாவது செய்திருக்கலாம் மூன்று மணிக்கு பியூன் பன்னீரைக் கூப்பிட்டார் காஷியர்.

''வீட்டிலே கெஸ்ட் வந்திருக்காங்க; ஷாப்பிங் போகணும். நான் போறேன். எல்லோரும் போன பிறகு நீ ஆபீஸைப் பூட்டிச் சாவியை வீட்டிலே கொண்டு வந்து கொடுத்து விட்டுப் போ'' என்றார்.

''சரி'' என்றான் பன்னீர்.

மானேஜர் அறையினுள் நுழைந்து ஜன்னல் கதவுகளைச் சாத்திவிட்டுத் திரும்பியவனின் பார்வை சுழல் நாற்காலியில் பதிந்தது.

குஷன் பதிக்கப்பட்ட அழகிய வெளிர் நீல நிறத்தில் அவனைப் பார்த்துக் கண் சிமிட்டிக் கொண்டிருந்தது அந்த நாற்காலி.

''ம்.... வேலை பார்த்தால் இதைப் போன்ற நாற்காலியில் உட்கார்ந்து 'மக்காக' ஒரு சிகரெட்டைப் பிடித்துக் கொண்டு இப்படியும் அப்படியும் நாற்காலியில் சுழன்று கொண்டே ஃபைலைப் பார்க்க வேண்டும். பின், பெல்லை அடித்து 'ப்ளடி' பியூனைக் கூப்பிட வேண்டும். இதை விட்டு, பெல் அடித்ததும் ஓடி வருவதும் ஓர் உத்தியோகமா? ச்சே...!''

அலுத்துக் கொண்டான். அந்த அலுப்பின் இடையே ஒரு சபலம் மின்னலாய் மின்னி மறைய...

என் சர்வீஸில் நான் மானேஜராகப் போகிறேனோ இல்லையோ, இன்னிக்கு ஒரு நாள் —சில நிமிடங்களுக்கு — மானேஜரைப் போல் இருந்தால் என்ன?

மானேஜரைப் போலவே இந்த நாற்காலியில் உட்கார்ந்து...

யார் பார்த்துவிடப் போகிறார்கள்? எல்லோரும் போய்விட்டார்களே!

குனிந்து போட்டிருந்த சட்டையைப் பார்த்தான். கறுப்பு பேண்ட், வெள்ளையில் பூப்போட்ட பாலிஸ்டர் ஸ்லாக்... மானேஜர் இல்லாத தைரியம், யூனிபாரம் போட்டு வரவில்லை.

டிரஸ்.... திருப்திகரம்.

பர்சனாலிடி....?

'இன்றைக்கு இருக்கும் ஹீரோ எல்லோரும் உன்கிட்டப் பிச்சை வாங்கணும்'னு டைப்பிஸ்ட் ஷோபா அன்னிக்குச் சொன்னது இன்னும் காதிலே ஒலிக்குதே!

அப்புறம் என்ன?

சுழற் நாற்காலியில் உட்கார்ந்தான்.

மேஜை மேல் இருந்த சிகரெட் கேஸைத் திறந்து, ஒன்றை உருவி, பற்றவைத்து, 'தம்' கட்டி நிறையப் புகையை உள்ளே இழுத்து மெல்ல விட்டான்.

அருகே இருந்த ஃபைலை எடுத்து எதையோ புரட்டியபடி நாற்காலியில் இப்படியும் அப்படியும் சுற்றினான்.

---

ஆல்ப்ரட் ஹிட்ச்காக் தாம் டைரக்ட் செய்யும் படங்களில் ஏதாவது ஓர் இடத்தில் ஒரு நிமிஷம் தோன்றுவதை வழக்கமாகக் கொண்டிருந்தார். படத்தில் அவர் எங்கே வருகிறார் என்பதை கண்டு பிடிப்பது ரசிகர்களுக்கு ஒரு ரசமான விஷயம். ஆனால் The Trouble with Harry என்ற படத்தில் அவரைக் காண முடியவில்லை. அந்தப் படத்திலிருந்து அவர் அப்படி தோன்றுவதை நிறுத்திக் கொண்டார். ''படம் பார்க்கிறவர்கள் என்னைக் கண்டு பிடிக்க வேண்டும் என்ற ஆர்வத்தில் கதையைக் கோட்டை விட்டு விடுகிறார்கள். என்னைவிட படத்தின் கதை தான் முக்கியம்'' என்றார் ஹிட்ச்காக். அதற்குப் பதிலாக டிரெய்லர்களில் தோன்றிப்படத்தை அறிமுகம் செய்து வைக்கத் தொடங்கினார். ஹிட்ச்காக்கின் படங்களைப் போலவே அவற்றின் டிரெய்லர்களைப் பார்ப்பதும் ரசிகர்களுக்கு ஒரு சுவாரஸ்யமான அனுபவமாகத்தான் இருந்தது.

— எம். சிவசுப்ரமணியன்

பிறவி எடுத்த பெரும் பயன் மெல்ல மெல்ல ஈடேறிக் கொண்டிருக்கும் இதமான நினைவு புகைப்படலமாய் மனத்தை நிறைக்கத் தொடங்கியபோது. . .

''டக்... டக்...''

திறந்திருந்த கதவை நாசூக்காக யாரோ தட்டும் ஒலி....

யாரோ வருகிறார்கள் போலிருக்கிறது.

வரட்டுமே!

''எஸ். கம் இன்.''

''வணக்கம் ஸார்.''

வந்தவரைப் பார்த்தான்.

—நடுத்தர வயது. போதுமான செல்வச் செழிப்பின் ரேகைகள் முகத்தில் ஓடிக் கொண்டிருந்தன.

''வணக்கம். உட்காருங்கள்.''

உட்கார்ந்தார்.

''நீங்கதானே மிஸ்டர் மோகன்... இந்த ஆபீஸ் மானேஜர்...''

மானேஜரை இவர் பார்த்ததில்லை போலிருக்கிறது.

''எஸ்,....''

''ஸார், என் பெயர் மகாதேவன். விருத்தாசலத்தில் இருக்கிறாரே உங்க நண்பர் மூர்த்தி... அவர் அனுப்பி வருகிறேன்...''

''சொல்லுங்க...''

''இங்கே பியூன் பன்னீர்னு....''

'திக்'கென்றது பன்னீருக்கு. நாடகத்தைத் துணிந்து தொடர்ந்தான்.

''ஆமாம். என்னோட பியூன்தான். யாருக்கோ உடம்பு சரியில்லேன்னு சீக்கிரமா வீட்டுக்குப் போயிட்டான். இனிமே நாளைக்குத்தான் வருவான்....''

'பொய்... பச்சைப் பொய்.'

''அப்படியா?'' என்றவர் தொடர்ந்தார்.:

''நீங்க எழுதின கடிதத்தை மூர்த்தி என் கிட்டே காட்டினார். எனக்கு ஒரே ஒரு பொண்ணுதான். வேறே பிள்ளைகளே கிடையாது. சொந்தத்தில் ஒரு வீடு, சாப்பாட்டுக்குப் போதுமான நிலம், கையிலே கொஞ்சம் ரொக்கம் எல்லாம் இருக்கு. எல்லாம் என் பொண்ணுக்குத்தான். அவளுக்கு ஒரு நல்ல வரனைப் பார்க்கும்படியும், பையன் பார்க்கச் சுமாரா, நல்ல குணமுள்ளவனாக இருந்தாப் போதும்னும் 'மூர்த்தி கிட்டே சொல்லியிருந்தேன். அவர் உங்களுக்கு விவரத்தை எழுதியிருந்தார். நீங்க பன்னீரைப் பத்தி ரொம்பப் புகழ்ந்து எழுதியிருந்தீங்க. பையன் எஸ்.எஸ். எல். சி. பாஸ் செய்திருக்கான், இன்னும்ரெண்டு மாசத்திலே கிளார்க்கா பிரமோட்பண்ணப் போறதா எழுதியிருந்தீங்க...''

''......''

''அதுதான் பையனைப் பார்த்துட்டுப் போகலாம்னு வந்தேன். முடியலே. ஒரு வேளை, இந்த வரனைப் பார்க்க முடியலேன்னு அல்லது திருப்தி ஏற்படலேன்னு திருப்பூரிலே இருக்கிற இன்னொரு வரனைப் பார்த்து முடிவு பண்ற எண்ணத்தோடு வந்தேன். பரவாயில்லே.ஐந்தரை மணி பஸ்ஸிலே டிக்கெட் ரிசர்வ் செய்திருக்கேன். நான் புறப்படறேன் ஸார்....''

கரம் குவித்தபடி இடத்தை விட்டு எழுந்தார். பின், கதவைத் திறந்து கொண்டு வெளியே நடந்தார்.

சுழல் நாற்காலியில் ஆடாமல் அசையாமல் சிலையாய் அமர்ந்திருந்தான் பன்னீர்!



# ரத்த பாசம்



ஆடும் சிவாஜி, ஓடும் சிவாஜி, ஸ்ரீப்ரியாவைக் கட்டிப் பிடித்துக் கொண்டு பாடும் சிவாஜி, அயோக்கியர்களுடன் மோதும் சிவாஜி, தங்கையிடம் அன்பைப் பொழியும் சிவாஜி — இப்படி இந்தப் படம் முழுவதும் சிவாஜி மயம்தான்!

திரைக் கதையை நன்றாய்க் குழப்பியிருக்கிறார்கள். வெளி நாட்டுக்குச் சென்று படப்பிடிப்பை நடத்தி விட்டால் அது ஒரு பெரிய சாதனை என்ற நினைவு சில காலமாக நம் படாதிபதிகளின் எண்ணமாக இருந்து வருகிறது.

சிவாஜி, ஸ்ரீப்ரியாவுடன் கட்டிலில் சொல்லும் நரி, வடைக்கதை ரொம்பவும் கீழ்த்தரமாயிருக்கிறது.

ஒரு காட்சி கூட மனத்தில் நிற்கவில்லை. ஒரு புது ஆண்மகனின் காரில் ஏறி அமர்ந்ததும் ஸ்ரீப்ரியா காதல் கனவு காணத்தொடங்கி விடுகிறாரே! அதிசயம்தான்!

பாடல்கள் பரவாயில்லை. சில நன்றாகவே இருக்கின்றன.

ஆமாம். இந்தப் படத்தின் டைரக்டர் யார்? இருட்டடிப்பா? அல்லது வெட்கப்பட்டு வெளியிடவில்லையா?

தையல் கடையில் கோணலும் மாணலுமாக வெட்டிப் போடப்பட்டிருக்கும் பல வர்ணத் துணிகளின் துண்டுகளை ஒன்று சேர்த்து ஒரு முழுப் பாவாடையாகத் தைக்க முயன்று அதிலும் தோல்வியே கண்டிருக்கிறார்கள்!

தொடக்கத்தில் உரையாடலே இல்லாமல் தரப்படும் பூர்வகதை விறுவிறுப்பாக அமைந்துள்ளது. புதிய உத்தி. இந்த ஒரு நல்ல அம்சத்தை மட்டுமாவது பாராட்ட முடிந்ததில் மகிழ்ச்சி.

-கார்த்தன்

# கோட்டைக்குப் போயிருந்தேன்

'பரந்தாமன்'



தமிழ்நாடு அரசுத் தலைமைச் செயலகமான கோட்டையில் தலைமைச் செயலாளர் செல்லும் முக்கிய வாசல் பக்கமுள்ள 'லிப்ட்' அருகே கூடி நின்று சிலர் சிரித்துப் பேசிக் கொண்டிருந்தனர். அருகில் சென்றபோது எம். ஜி. ஆரின் பெரிய அளவு படமொன்று மாட்டியிருப்பது தெரிந்தது. இது ஜூன் 2ம் தேதியன்று அவசர அவசரமாக மாட்டப்பட்டதாகும். எம். ஜி. ஆர். ஆட்சி நீக்கப்பட்டதுமே அவர் படங்களெல்லாம் அகற்றப்பட்டன என்றும் அவர் மீண்டும் வருவாரென்று அங்கு உள்ளவர்கள் எதிர்பார்க்கவில்லை என்றும் 2ம் தேதி தேர்தல் முடிவு தெரிந்ததும் அவசர அவசரமாக அந்தப் போட்டோவைத் தயாரித்து மாட்டினர் என்றும் சொன்னார்கள்.

தகவல் விளம்பர இலாகா காரியாலய முன் வராந்தாவில் ஆட்கள் சிலர் காத்திருந்தனர். விசாரித்தபோது முதல்வர் பதவி ஏற்பு விழாவுக்குப் பந்தல், வளைவு, மேடை, அலங்கார விளக்கு, மலர் மாலைகள், அமைப்புகளுக்காக வந்தவர்கள் என்று தெரிந்தது. அரசு பழைய தண்டவாளத்தில் மூன்று மாதங்களுக்குப் பின் இயங்கத் தொடங்கி விட்டது என்று எண்ணினேன். காரியாலயத்துக்குள் காரியமாகச் சென்றபோது அலுவலர் இருக்கை காலியாக இருந்தது. காப்பிக்குப் போயிருப்பதாகச் சொன்னார்கள்.



செகரடேரியட்டில்காப்பிக்கு பல பொருள் உண்டு. அலுவலகத்தின் உள்ளே 'காப்பிக்கு' என்றால் சம்பந்தப்பட்டவர் சொந்த விஷயமாக வெளியே போயிருக்கிறார் என்று பொருள். வராந்தாக்களில் நிற்கும் சீருடை அணிந்த ஏவலர்கள் 'காப்பி' என்று சொல்லிச் சற்று நாணிக் கோணி நின்றால் நாம் அவரிடம் வழி அல்லது ஏதாவது தகவல் கேட்டறிந்ததற்குப் பிரதி பலனாக எதிர்பார்க்கும் 'காசு' என்று பொருள். இன்னொரு 'காப்பி' உண்டு. அது அதிகாரிகளிடம் சென்று தமது தேவையைச் சொல்லும்போது, ''காப்பி இருக்கா?'' என்று கேட்பது இது நமது விஷயத்தின் 'நகல்' இருக்கிறதா என்று கேட்பதாகும்.

காரியாலயச் சுவரில் பெரிய அளவில் காணப்பட்ட காலண்டரில் மாதம் பிறந்து ஒரு வாரமாகியும் 'மே' மாதம் தான் இருந்தது! பாவம், கிழிப் பாரின்றிக் கடற் காற்றில் தத்தளித்துக் கொண்டிருந்தது. நான் போன விஷயம் பற்றிப் பெரிதும் முயன்று அறிந்தபோது 'எல்லாம் ரெடி, டைப் செய்வதுதான் பாக்கி. செக்ஷன் டைப்பிஸ்ட் லீவு' என்றார். அந்த நீண்ட அகல அரங்கு நிறையபதினைந்துக்குமேற்பட்ட டைப் பிஸ்டுகள் இருக்கத்தான் செய்தார்கள். ஒருவர் வரவில்லையென்றால் மற்றொருவரை வைத்துச் செய்வதில்லையா? வீட்டில் வேலைக்காரி வராதிருந்து விட்டால் வீடு பெருக்காமல் பாத்திரம் தேய்க்காமல் இருந்து விடுவார்களா? அது சொந்தம். இது வேலைதானே! ஏன் அவ்வளவு அக்கறை காட்ட வேண்டும்?

அங்கே இந்தியன் காப்பி ஹவுஸில் எப்போதும் கூட்டம் நிறைந்திருக்கும். பலர் நின்றபடி சாப்பிட்டுக் கொண்டிருந்தனர். அதில் ஒருவர் மற்றவரிடம் ''ஆண்டவன் இருக்கத்தான் செய்கிறான். மக்கள் சரியான தீர்ப்புவழங்கிவிட்டார்கள்'' என்று நடந்து முடிந்த தேர்தல் பற்றிச் சொன்னது கேட்டது. இதே காண்டீனில் முன்பு நின்றபோது எம். ஜி. ஆரின் ஆட்சி நீங்கி இரண்டு நாளான நேரம். ஒரு தலைமை அதிகாரிமற்றொரு அதிகாரியிடம் ''என்ன இருந்தாலும் தமிழ்த் தாய்க்குத் தாங்கவில்லை பார்த்தீங்களா? மலையாளி ஆட்சியை ஒழித்து விட்டாளே'' என்று சொல்லி மகிழ்ந்ததையும் கேட்டேன்.

அங்கே இருந்த குடிநீர் வழங்கு குழாயண்டை நீரெடுத்துப் பருக இரு எவர் சில்வர் டம்ளர்கள் இருந்தன. இரண்டையும் நீளமான கெட்டியான சங்கிலியால் பிணைத்திருந்தார்கள். அதைக் கண்டு கண் கலங்கியது. சுதந்திரம் வாங்கி 33 வருடங்களாகியும், அரசு தலைமைச் செயலகத்தில் கூட ஒரு சாதாரண டம்ளரைத் திருட்டுப் போகாமல் காக்க சங்கிலி போட்டுக் காப்பாற்ற வேண்டிய நாணயக் குறைவான சூழ்நிலையில் தான் நாம் இன்னும் இருந்து கொண்டிருக்கிறோம்!

# தேள்! தேள்!

சமீபத்தில் தேள்களைப்பற்றி ஒரு பத்திரிகைச் செய்தி: ராஜா டெஹ்ஸின் என்பவர் உதயபூரில் ஒரு குன்றில் ஆயிரக்கணக்கான தேள்களை ஒரே இடத்தில் ஒருசேரப் பார்த்தார். இது இயற்கைக்கு மாறுபட்டது என்பதால் அதிசயச் செய்தியாகப் பத்திரிகைகளில் இடம் பெற்றது. இது குறித்து மதுரை காமராஜர் பல்கலைக் கழகத்தில் பணியாற்றும் உயிரியல் நிபுணர் அந்தோனி பேசில் எழுதுகிறார்:

தேளின் கருவடைந்த முட்டைகள் தேளின் உடலினுள்ளே சுமார் 6 முதல் 15 மாதங்கள் இருக்கும். முட்டையிலிருந்து வெளி வந்த இளம் குஞ்சுகள் தடவைக்கு ஒன்று அல்லது இரண்டு குஞ்சுகளாகத் தாயின் உடலிலிருந்து முழுமையாக வெளிவரும். இவ்வாறு குஞ்சுகள் வெளி வருவது சில வாரங்கள் வரை நீடிக்கும். ஒரு தேள் சுமார் 100 முதல் 300 முட்டைகள் வரை தன் உடலுக்குள் வைத்திருக்கும்.

முட்டையிலிருந்து வெளி வந்த குஞ்சுகள் சுமார் 9 முதல் 12 நாட்கள் வரை தாயின் முதுகின் மேல் ஏறி உட்கார்ந்து கொண்டு தாய் செல்லும் இடமெல்லாம் செல்லும். சிறிய தேள்கள் தங்களின் உடலின் மேல் தோலை முதன் முதலாக உரிக்கும் வரை தாயின் முதுகில் குடியேறியிருக்கும். தாயின் முதுகில் இருக்கும் காலத்தில் குஞ்சுகள் உணவு உண்ணுது. உணவு சிறிய குஞ்சுகளின் உடலினுள் ஏற்கனவே இயற்கையாய்ச் சேகரித்து வைக்கப்பட்டிருக்கும்.

தேள் பெரும்பாலும் தனித் தனியாக வாழக்கூடிய வாழ்க்கை முறை கொண்டது. கூட்டமாக வாழாது. ஒன்றுக்கொன்று எதிர்ப்பட்டால் அங்கு ஒரு போர்க்களமே உருவாகிவிடும். இரண்டில் ஒன்று கொல்லப்பட்டு, கொல்லப்பட்ட தேள் வெற்றியடைந்த தேளால் உணவாக உட்கொள்ளப்படும். தன் இனத்தையே உண்டு வாழும் இயல்புடையவை தேள்கள். ஆகவே எந்தச் சூழ்நிலையிலும் தேள்கள் கூட்டமாக வாழுவது இல்லை.

ஆண் தேளும் பெண் தேளும் இணைகூடும் சில நிமிடங்கள் மாத்திரம் இரண்டு தேள்கள் ஒன்ருக இருப்பதைப் பார்க்கலாம்.

இணைகூடிப் பிரிந்த மறுகணம் ஆண் தேள் தப்பி ஓடினுல்தான் உண்டு! இல்லையேல் உருவில் பெரிதான பெண் தேள் ஆண் தேளைக் கொன்று தன் உணவாக்கிக் கொண்டு விடும்!

இந்த நியதியின்படி பார்த்தால் ராஜா டெஹ்ஸின் உதயப்பூர் குன்றில் ஆயிரக்கணக்கான தேள்களை ஒரே இடத்தில் பார்த்தது இயற்கைக்குப் பொருந்துவதாயில்லை. மிருதுவான மண்ணில் குழி அமைத்துத் தன் வாழ்க்கையை நடத்தும் தேள்கள். ஒரே மண் மேட்டில் இருப்பினும், தனித் தனியே குழி அமைத்து ஒரு தேளின் கூட்டிற்கும் மற்ற தேளின் கூட்டிற்கும் இணைப்பு இல்லாமல் தடுப்பு உண்டாக்கி வாழ்க்கை நடத்தி வந்திருக்கலாமே யொழிய ஒரே குழியில் பல தேள்கள் வாழுவது சாத்தியமன்று.

மதுரைக்குப் பதின்மூன்று மைல்களுக்கப்பால் உள்ள அழகர்மலையின் மீது செம்மண் நிறைந்த மிருதுவான மண்ணில் "நட்டுவாக்களி" என்ற ராட்சஸத் தேள்களை விலங்கியல் பகுதி மாணவர்கள் 'பரிசோதனைக்குச் சேகரிக்க மண்ணைத் தோண்டுவர். ஒரே இடத்தில் நூற்றுக்கணக்கான தேள்களைச் சேகரித்தும் விடுவர். உடனே தேள்கள் கூட்டமாக வாழ்க்கை நடத்துகின்றன என்று சொல்லி விட முடியாது. ஆங்காங்கே பொந்துகள் அமைத்து வாழும். மண்ணை வெட்டும்போது ஒரு கூட்டிற்கும் இன்னொரு பொந்துக்கும் இடையில் உள்ள இடைவெளி நீக்கப்பட்டு ஒரே இடமாக மாறிவிடச் சந்தர்ப்பம் உண்டு.

Printed by V. Murali and Published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Ltd. at the Bharathan Press, Race Course Road Guindy, Madras-600 032. Editor: K. Rajendran

# எடுத்துச் சொன்னார் ஒருவர், ஏற்றுக் கொண்டார் மற்றவர், அடைந்தனர் இருவரும் லாபம், அதுவே நல்ல விவேகம்!

இருவரும் இப்போது சேமிப்பில்
காட்டுகின்றனர் வேகம்!



ஒருவர் மற்றவருடைய அனுபவத்திலிருந்து பயனடைவதே விவேகமான செயலாகும். இவ்விருவரும் சேமித்திட முடிவு செய்துள்ளனர். எனவே இவர்தம் குடும்பம் நல்வாழ்வு பெறுவது திண்ணம். பாங்க் ஆஃப் பரோடாவில் சேமிப்பு கணக்கு வைத்துள்ள இலட்சக்கணக்கான இல்லத்தரசிகளே இந்த விவேகத்தின் சான்றாக உள்ளனர். இயன்ற போதெல்லாம், இயன்ற அளவு இவர்கள் சேமித்துக் கொண்டிருப்பதன் மூலம், தங்கள் குடும்பம் செழிப்புடன் விளங்கச் செய்வதில் வெற்றி கண்டுள்ளனர்.

பாங்க் ஆஃப் பரோடாவில், சேமிப்பு கணக்கு மட்டுமன்றி இன்னும் நல்ல பல திட்டங்கள் உண்டு. நீங்கள் நல்ல முறையில் சேமித்திட அவைகள் உதவுகின்றன.

நீங்களும் சேமிக்கத் தொடங்குங்கள்—நீங்களும் உங்கள் குடும்பமும் நல்வாழ்வு நோக்கி நடைபோடவே.

கீழ்க்கண்ட திட்டங்களில் உகந்ததைத் தேர்ந்தெடுங்கள்:

1. மந்த்லி இன்கம் பிளான்
2. ஃபிக்ஸட் டெபாஸிட் பிளான்
3. ரெகுலர் இன்கம் பிளான்
4. ரெக்கரிங் டெபாஸிட் ஸ்கீம்
5. ரெகுலர் இன்கம்-கம்-ரெக்கரிங் டெபாஸிட் பிளான்
6. ஃபெஸ்டிவல் டெபாஸிட் பிளான்

முழுமையான பாங்கிங் வசதிகளையும் சேவைகளையும் பெற, பாங்க் ஆஃப் பரோடா உங்களை முகமன் கூறி வரவேற்கிறது.

**சேமிப்பது ஒரு நல்ல பழக்கம்**




**பாங்க் ஆஃப் பரோடா**

(இந்திய அரசுக்குச் சொந்தமானது)

ULKA BOB–3/80 TAM

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Sri Lanka

இலங்கையில் விலை 90 சதம் (தபால் செலவு தனி)
மலேசியாவில் விலை (விமானப்பதிப்பு) 75 மலேசியக் காசு